**एतत्** = (வேறுயுள்ள) இது,
ஏதத்

**प्रेय:** = பிரியமானதாக,
ப்ரேய:

**कथं** = எப்படி,
கத2ம்

**स्यात्** = இருக்கமுடியும்?
ஸ்யாத்

**जीवित-अर्थी** = பிழைத்திருக்க - விரும்புகிறவன்,
ஜீவித-அர்தீ2

**भार्या-आद्यं** = பார்யை- முதலானவைகளை,
பா4ர்யா-ஆத்3யம்

**वितरति** = கொடுத்துவிடுகிறான் (தியாகம் செய்துவிடுகிறான்),
விதரதி

**स्व-आत्मन:** = தன்னுடைய ஆத்மாவின்,
ஸ்வ-ஆத்மன:

**श्रेय:** = க்ஷேமத்தை,
ஶ்ரேய:

**इच्छन्** = விரும்புகிறவன்,
இச்ச2ன்

**वपु: च** = சரீரத்தைக்கூட (தியாகம் செய்துவிடுகிறான்),
வபு: ச

**तस्मात्** = ஆகையால்,
தஸ்மாத்

**विद्वान्** = அறிவுள்ளவன்,
வித்3வான்

**आत्मानं** = ஆத்மாவை,
ஆத்மானம்

**एव** = தான்,
ஏவ

**अधिकं** = மேலான,
அதி4கம்

**प्रियं** = பிரியமான வஸ்துவாக,
ப்ரியம்

**उपासीत** = உபாஸிக்கவேண்டும். (தேடியடையவேண்டும்),
உபாஸீத

| | | |
|---|---|---|
| **अन्यत्** <br> **அன்யத்** | = | வேறு எதையும், |
| **न च** <br> **ந ச** | = | உபாஸிக்கக்கூடாது. |

ஓரிடத்தில் தீபம் பிரகாசித்துக் கொண்டிருக்கையில் அந்த தீபத்திற்கு எவ்வள வுக்கெவ்வளவு ஸமீபத்தில் பதார்த்தமிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக பிரகாசிக்கிறதென்பதையும், தூரம் போகப்போக பிரகாசம் குறைகிறதென்பதையும், பார்த்திருக்கிறோம். அப்படியே ஆத்மாவிடம் நெருங்க நெருங்க பதார்த்தங்களில் பிரீதி அதிகமாவதையும், ஆத்மாவிடமிருந்து தள்ளிப் போகப் போக பிரீதி குறைவ தையும் கவனித்தால், ஆத்மாதான் அத்யந்தப் பிரீதிக்கு விஷயம் என்று தெரிய வரும் என்கிறார். ஆத்மாவிற்கு மிகவும் நெருங்கியது சரீரம்; அதில் பிரீதி ஏற்படு கிறது; அந்த சரீரத்திற்கு அனுகூலமாயிருப்பதினால் பார்வையிடத்தில் பிரீதி; தனக்கும் பார்யைக்கும் பிரீதியுண்டு பண்ணுவதால் குழந்தையிடத்தில் பிரீதி; எல்லோருக்கும் ஸுக ஸாதனமாயிருப்பதினால் சொத்தில் பிரீதி; அந்த சொத்து ஸ்ம்பாதிக்க ஸாதனமாயிருப்பதினால் உத்தியோகம் முதலானதில் பிரீதி. இவ்வித மாக ஆத்மாவைத்தவிர மற்ற பதார்த்தங்கள் எல்லாம் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரை யாகவோ ஆத்மாவிற்கு ஸுகஸாதனமாயிருப்பதினாலேயே பிரீதிக்கு விஷயமாகி ன்றன. ஆகையால் அத்யந்த பிரீதி விஷயம் ஆத்மாதான் என்று ஏற்படுகிறது.

இதுவும் தவிர, தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு பார்யை முதலான வைகளை பரித்யாகம் செய்யவேண்டி வந்தால் பரித்யாகமே செய்துவிடுகிறான்; தனக்கு அனுகூலமில்லாமல் பிரதிகூலமாயிருந்தாலும் பரித்யாகம் செய்து விடுகி றான். தன் ஆத்மா நல்ல கதியடைய வேண்டுமென்ற எண்ணத்துடன் பிரயாகை முதலான இடங்களில் அல்லது யுத்தகளத்தில் சரீரத்தைக்கூட தியாகம் செய்து விடுகிறான். சரீரம் துக்கத்தையே கொடுக்கிறதென்ற எண்ணம் வந்து அதைத் தொலை த்துவிட்டால் ஸௌக்கியமடையலாமென்ற மோஹத்தினால் தற்கொலைகூட செய்து கொள்வதில்லையா? இவைகளிலிருந்தும் மிகவும் பிரியமான வஸ்து ஆத்மாதான் என்று நன்றாய்த் தெரிகிறது. மற்ற வஸ்துக்கள் பலவிதமான துன்பங்களையே உண்டு பண்ணுவதால், அவைகளில் பிரீதி வைப்பது நியாயமில்லை.

**(10)**

அவை ஏதேனும் ஒரு ஸமயத்தில் ஸுகம் கொடுப்பதாகத் தோன்றிப் பிரியப் படக்கூடியதாயிருந்தாலும், அதுவே வேறு ஸமயங்களில் துக்கத்தைக கொடுப்பதி னால் பிரியமில்லாததாக ஆகிவிடும். ஆத்மா மாத்திரம் எப்பொழுதும் பிரியமாக விருக்கும் வஸ்து என்பதை அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார் -

**यस्मात् यावत् सुखं स्यादिह हि विषयतः तावदस्मिन् प्रियत्वं**
**यावत् दुःखं च यस्मात् भवति खलु ततः तावदेवाप्रियत्वम् ।**
**नैकस्मिन् सर्वकालेऽस्त्यु भयमपि कदाऽप्यप्रियोऽपि प्रियः स्यात्**
**प्रेयानप्यप्रियो वा सततमपि ततः प्रेय आत्माख्यवस्तु ॥ १० ॥**

**யஸ்மாத் யாவத் ஸுக²ம் ஸ்யாதி³ஹ ஹி விஷயதஃ தாவத³ஸ்மின் ப்ரியத்வம்**
**யாவத் து³ஃக²ம் ச யஸ்மாத் ப⁴வதி க²லு ததஃ தாவதே³வாப்ரியத்வம் ।**
**நைகஸ்மின் ஸர்வகாலே(அ)ஸ்த்யு ப⁴யமபி கதா³(அ)ப்யப்ரியோ(அ)பி ப்ரியஃ ஸ்யாத்**
**ப்ரேயானப்யப்ரியோ வா ஸததமபி ததஃ ப்ரேய ஆத்மாக்²யவஸ்து ॥ 10 ॥**

**यस्मात्** **யஸ்மாத்** = எந்த,

**विषयतः** **விஷயதஃ** = விஷயத்திலிருந்து,

**यावत्** **யாவத்** = எது வரை (எவ்வளவு),

**सुखं** **ஸுக²ம்** = ஸுகமானது,

**इह** **இஹ** = இங்கே,

**स्यात्** **ஸ்யாத்** = ஏற்படுமோ,

**अस्मिन्** **அஸ்மின்** = இதில் (அந்த விஷயத்தில்),

**तावत्** **தாவத்** = அதுவரை (அவ்வளவு),

**प्रियत्वं** **ப்ரியத்வம்** = பிரியமாயிருக்கும் தன்மையும்,

**यस्मात्** **யஸ்மாத்** = எதிலிருந்து,

**यावत्** **யாவத்** = எதுவரை (எவ்வளவு),

**दुःखं च** **து³ஃக²ம் ச** = துக்கமும்,

**भवति** **ப⁴வதி** = ஏற்படுகிறதோ,

| | | |
|---|---|---|
| ततः<br>ததः | = | அதில், |
| तावत् एव<br>தாவத் ஏவ | = | அதுவரை (அவ்வளவு) தான், |
| अप्रियत्वं<br>அப்ரியத்வம் | = | அப்பிரியமாயிருக்கும் தன்மையும், |
| हि खलु<br>ஹி க$^{2}$லு | = | உண்டென்பது பிரஸித்தமல்லவா? |
| एकस्मिन्<br>ஏகஸ்மின் | = | ஒரே விஷயத்தில், |
| सर्व काले<br>ஸர்வ காலே | = | எல்லா ஸமயத்திலும், |
| अपि<br>அபி | = | கூட, |
| अभयं<br>அப$^{4}$யம் | = | இரண்டும் (பிரியரையிருக்கும் தன்மையும் அப்பிரியமாயிருக்கும் தன்மையும்), |
| न अस्ति<br>ந அஸ்தி | = | இருப்பதில்லை, |
| अप्रियः अपि<br>அப்ரியః அபி | = | அப்பிரியமாயிருக்கும் வஸ்துகூட, |
| कदाऽपि<br>கதா$^{3}$(அ)பி | = | ஏதோவொரு ஸமயத்தில், |
| प्रियः<br>ப்ரியః | = | பிரியமாக, |
| स्यात्<br>ஸ்யாத் | = | இருக்கலாம். (அப்படியே.), |
| प्रेयान् अपि<br>ப்ரேயான் அபி | = | மிகவும் பிரியமான வஸ்துகூட (வேறு ஸமயத்தில்), |
| अप्रियः वा<br>அப்ரியః வா | = | அப்பிரியமாகவும் (ஆகலாம்), |
| ततः<br>ததః | = | ஆகையால், |
| आत्माख्य-वस्तु<br>ஆத்மாக்$^{2}$ய-வஸ்து | = | ஆத்மாவென்று சொல்லப்படும் வஸ்து (ஒன்று தான்), |
| सततं अपि<br>ஸததம் அபி | = | எப்பொழுதும் (இடைவிடாமல்), |

**प्रेय** = மிகவும் பிரியமாயிருக்கும் வஸ்து.

**ப்ரேய**

**(11)**

அத்யந்தப் பிரியமாயிருக்கும் ஆத்மாவை ஸாக்ஷாத்காரம் செய்தால்தான் பரமபுருஷார்த்தமான மோக்ஷமென்ற நிரதிசயமான ஆனந்தநிலை கிடைக்கும். ஸகல துக்கங்களும் விலகும். அப்படிக்கன்னியில் பிரியமாய் தோன்றும் மற்ற வஸ்துக் களை ஸம்பாதனம் செய்வதினால் ஸ்திரமான ஸுகம் கிடைக்காது என்பது மாத்திர மில்லை, துக்கம் விலகாது என்பது மாத்திரமும் இல்லை, மேலுக்குமேல் துக்கமேதான் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். ஆகையால் விஷயமறியதவர்கள் தான் அவ்வஸ்துக் களை விரும்புவார்கள்; விஷயமறிந்தவர்கள் ஆத்மஸ்வரூபத்தையே அறிய விரும்பு வார்கள். இவ்விஷயம் காடகோபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கிறதென்று எடுத்துக் காட்டுகிறார் -

**श्रेय: प्रेयश्च लोके द्विविधमभिहितं काम्यमात्यन्तिकं च**
**काम्यं दु:खैकबीजं क्षणलवविरसं तत् चिकीर्षन्ति मन्दा: ।**
**ब्रह्मैवात्यन्तिकं यत् निरतिशय सुखस्यास्पदं संश्रयन्ते**
**तत्त्वज्ञा: तच्च काठोपनिषदभिहितं षड्विधायां च वल्ल्याम् ॥ ११ ॥**

**ஶ்ரேய: ப்ரேயஶ்ச லோகே த்³விவித⁴மபி⁴ஹிதம் காம்யமாத்யந்திகம் ச**
**காம்யம் து³:கை²கபீ³ஜம் க்ஷணலவவிரஸம் தத் சிகீர்ஷந்தி மந்தா³: ।**
**ப்³ரஹ்மைவாத்யந்திகம் யத் நிரதிஶய ஸுக²ஸ்யாஸ்பத³ம் ஸம்ஶ்ரயந்தே**
**தத்த்வஜ்ஞா: தச்ச காடோ²பநிஷத³பி⁴ஹிதம் ஷட்³விதா⁴யாம் ச வல்ல்யாம் ॥11॥**

**श्रेय:** = சிரேயஸ் (சிலாக்கியமானது),

**ஶ்ரேய:**

**प्रेय: च** = பிரேயஸ் (மிகவும் பிரியமானது) என்றும்,

**ப்ரேய: ச**

**लोके** = உலகத்தில்,

**லோகே**

**द्विविध** = இரண்டு விதமாக,

**த்³விவித⁴**

**अभिहितं** = சொல்லப்படுகிறது, அதாவது,

**அபி⁴ஹிதம்**

**काम्यं** = ஆசைப்படும் வஸ்து,

**காம்யம்**

**आत्यन्तिकं च** = எல்லையற்றது (எதற்குமேல் எதுவும் கிடையாதோ அந்த உக்கமமான வஸ்து) என்றும்,

**ஆத்யந்திகம் ச**

| | | |
|---|---|---|
| **काम्यं** | = | ஆசைப்படும் வஸ்து, |
| **காம்யம்** | | |
| **दु:खैकबीजं** | = | துக்கத்திற்கே - விதை (காரணம்), |
| **து³:கை²கபீ³ஜம்** | | |
| **क्षणलव-विरसं** | = | ஒரு க்ஷணத்தின் அம்சத்திலேயே |
| **க்ஷணலவ-விரஸம்** | | ரஸமற்று போகக் கூடியது, |
| **तत्** | = | அதை, |
| **தத்** | | |
| **मन्दा:** | = | அறிவில்லாதவர்களே, |
| **மந்தா³:** | | |
| **चिकीर्षन्ति** | = | ஸம்பாதிக்க விரும்புவார்கள், |
| **சிகீர்ஷந்தி** | | |
| **आत्यन्तिकं** | = | எல்ஐலயற்றது என்பது, |
| **ஆத்யந்திகம்** | | |
| **यत्** | = | எது, |
| **யத்** | | |
| **निरतिशय-सुखस्य** | = | எதற்கு மேல் கிடையாதோ - அவ்வித |
| **நிரதிஶய-ஸுக²ஸ்ய** | | ஸுகத்திற்கு, |
| **आस्पदं** | = | இருப்பிடமான, |
| **ஆஸ்பத³ம்** | | |
| **ब्रह्म एव** | = | பிரஹ்மமேதான். (அதை), |
| **ப்³ரஹ்ம ஏவ** | | |
| **तत्त्वज्ञा:** | = | தத்வமறிந்தவர்கள், |
| **தத்த்வஜ்ஞா:** | | |
| **संश्रयन्ते** | = | நன்கு ஆசிரயிக்கிறுர்கள், |
| **ஸம்ஶ்ரயந்தே** | | |
| **तत् च** | = | அதுவும், |
| **தத் ச** | | |
| **षड्विधायां** | = | ஆறுவிதமான, |
| **ஷட்³விதா⁴யாம்** | | |
| **वल्ल्यां** | = | வல்லியில், |
| **வல்ல்யாம்** | | |
| **च** | = | கூட, |
| **ச** | | |
| **काठोपनिषत्-अभिहितं** | = | காடகோபநிஷத்தினுல் சொல்லப்பட்டிருக்கிறது. |
| **காடோ²பநிஷத்-அபி⁴ஹிதம்** | | |

**द्विविध**

**த்³விவித⁴**

இந்த பத்த்தையே, சிரேயஸ் இரண்டுவிதம் (பலனை உத்தேசித்து செய்யப்படுவது, மோக்ஷத்தையுத்தேசித்து செய்யப்படுவது), பிரேயஸ்ஸும் இரண்டுவிதம் (பார்யை புத்திராதிகள், மோக்ஷம்) என்று சிலர் அர்த்தம் செய்கிறுர்கள். அவ்விதம் அர்த்தம்செய்ய காடகோபநிஷத்தில் பிரமாணமில்லை. அங்கே

**अन्यत: श्रेयोऽन्यदुतैव प्रेय: ते उभे नानार्थे पुरुषं सिनीत: ।**
**तथो श्रेय आददानस्य साधु भवति हीयतेऽर्थाद्य उ प्रेयो वृणीते ॥**

**II - 1**

**அன்யத꞉ ஶ்ரேயோ(அ)ன்யது³தைவ ப்ரேய꞉ தே உபே⁴**
**நானுர்தே² புருஷம் ஸினீத꞉ ।**
**ததோ² ஶ்ரேய ஆத³தா³னஸ்ய ஸாது⁴ ப⁴வதி**
**ஹீயதே(அ)ர்தா²த்³ய உ ப்ரேயோ வ்ருணீதே ॥** II - 1

**श्रेयश्च प्रेयश्च मनुष्ययेत: तौ संपरीत्य विविनक्ति धीर: ।**
**श्रेयौ हि धीरोऽभिप्रेयसो वृणीते प्रेयो मन्दो योगक्षेमात वृणीते ॥**

**II - 2**

**ஶ்ரேயஶ்ச ப்ரேயஶ்ச மனுஷ்யயேத꞉ தௌ ஸம்பரீத்ய விவினக்தி தீ⁴ர꞉ ।**
**ஶ்ரேயௌ ஹி தீ⁴ரோ(அ)பி⁴ப்ரேயஸோ வ்ருணீதே ப்ரேயோ**
**மந்தோ³ யோக³க்ஷேமாத வ்ருணீதே ॥** II - 2

சிரேயஸ் பிரேயஸ். என்றே இரண்டாகப் பிரித்துக்காட்டியிருக்கிறது. பின்னுல் காம்யம் ஆத்யந்திகம் என்கிற சப்தங்களை "முறையே" என்று எடுத்துக்கொள்ளக் கூடாது; சிரேயஸ் என்பது ஆத்யந்திகம்; பிரேயஸ் என்பது காம்யம்.

**दुःखेक बीजे**

**து³க்³கே²க பீ³ஜே**

காம்ய பதார்த்தங்கள் ஸம்பாதிக்கிற காலத்திலும் துக்கத்தையே கொடுக்கிறது, அனுபவ காலத்திலும் துக்கமே, விலகிவிட்டால் அதைவிட துக்கம். ஆசைப் படும் போது நல்லதாகத் தோன்றினபோதிலும் அனுபவிக்கும்போதே அல்லது அனுபவித்த பிறகு அதிலுள்ள ருசிபோய் வெறுக்கத்தக்கதாகவே தெரியவரும். இத்தன்மையை நன்கு உணராமல் நல்லதாகத் தோன்றுகிறதென்பதிஞல் மோஹங் கொண்டு அதில் ஆசையேற்படுகிறது. அதிஞலேயே அவ்வித்ம் ஆசைப்படுகிறவர் களை 'மந்தர்கள்' என்கிறுர் ஆசார்யார்.

**तत्त्वज्ञाः**

**தத்த்வஜ்ஞா:**

வஸ்துக்களின் த்த்வத்தை நன்கு அறிந்தவர்கள் ஆசைக்கு இடங்கொடுக் காமல் சாசுவதமாயுள்ள ஆனந்த ஸ்வரூபமான பிரஹ்மத்தன்மையேயடைய விரும்புவார்கள்.

**(12)**

அவ்விதம் நிரதிச்ய - ஆனந்த ஸ்வரூபத்தை அறிந்து அடைய விரும்புகிறவர் களுடைய அனுபவமும் மனோபாவமும் எப்படியிருக்கும் என்று இரண்டு சுலோ தங்களில் வர்ணிக்கிறுர் –

**आत्माम्भोधेस्तरङ्गोऽस्म्यहमिति गमने भावयन आसनस्थः**
**संवित्सूत्रानुविद्धो मणिरहमिति वास्मीन्द्रियार्थप्रतीतौ ।**
**दृष्टोऽस्म्यात्मावलोकादिति शयनविधौ मग्न आनन्दसिन्धौ**
**अन्तर्निष्ठो मुमुक्षुः स खलु तनुभृतां यो नयत्येवमायुः ॥ १२ ॥**

**ஆத்மாம்போ⁴தே⁴ஸ்தரங்கோ³(அ)ஸ்ம்யஹமிதி க³மனே பா⁴வயன ஆஸனஸ்த²:**
**ஸம்வித்ஸூத்ரானுவித்³தோ⁴ மணிரஹமிதி வாஸ்மீந்த்³ரியார்த²ப்ரதீதௌ ।**
**த்³ருஷ்டோ(அ)ஸ்ம்யாத்மாவலோகாதி³தி ஶயனவிதௌ⁴ மக்³ன ஆனந்த³ஸிந்தௌ⁴**
**அந்தர்நிஷ்டோ² முமுக்ஷு: ஸ க²லு தனுப்⁴ருதாம் யோ நயத்யேவமாயு: ॥ 12 ॥**

**गमने** = நடக்கும்போது,

**க³மனே**

**अहं** = நான்,

**அஹம்**

**आत्म-अम्भोधेः** = ஆத்மாவாகிற - ஸமுத்திரத்தின்,

**ஆத்ம-அம்போ⁴தே⁴:**

**तरङ्गः** = அலையாக,

**தரங்க³:**

**अस्मि** = இருக்கிறேன்,

**அஸ்மி**

**इति** = என்றும்,

**இதி**

**आसन-स्थः** = ஆஸனத்தில் - இருக்கும்போது,

**ஆஸன-ஸ்த²:**

| | | |
|---|---|---|
| **संवित-सुत्र-अनुविद्धः** | = | சைதன்யமாகிற - கயிற்றில் - கோர்க்கப் |
| **ஸம்வித-ஸுத்ர-அனுவித்$^3$த$^4$꞉** | | பட்டிருக்கும், |
| **मणिः** | = | ரத்தினமாக, |
| **மணி꞉** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **अस्मि** | = | இருக்கிறேன், |
| **அஸ்மி** | | |
| **इति वा** | = | என்றும், |
| **இதி வா** | | |
| **इन्द्रिय-अर्थ-प्रतीतौ** | = | இந்திரியங்களுடைய - விஷயங்கள் - தென்படும் |
| **இந்த்$^3$ரிய-அர்த$^2$-ப்ரதீதௌ** | | போது, |
| **आत्म अवलोकात्** | = | ஆத்மா தென்படுவதினுல், |
| **ஆத்ம அவலோகாத்** | | |
| **दृष्टः** | = | ஆத்மாவை பார்த்துவிட்டவனுக, |
| **த்$^3$ருஷ்ட꞉** | | |
| **अस्मि** | = | இருக்கிறேன், |
| **அஸ்மி** | | |
| **इति** | = | என்றும், |
| **இதி** | | |
| **शयन-विधौ** | = | படுத்துக்கொண்டிருக்கும்போது, |
| **ஶயன-விதௌ$^4$** | | |
| **आनन्द-सिन्धौ** | = | ஆனந்தக் கடலில், |
| **ஆனந்த$^3$-ஸிந்தௌ$^4$** | | |
| **मग्न** | = | மூழ்கியிருக்கிறேன் என்றும், (பாவித்துக்கொண்டு), |
| **மக்$^3$ன** | | |
| **तनुभृतां** | = | மனிதர்களுக்குள், |
| **தனுப்$^4$ருதாம்** | | |
| **यः** | = | எவர், |
| **ய꞉** | | |
| **एवं** | = | இவ்விதமாக, |
| **ஏவம்** | | |
| **आयुः** | = | தன் வாழ்நாளை, |
| **ஆயு꞉** | | |
| **नयति** | = | செலுத்துகிறுரோ, |
| **நயதி** | | |

| | | |
|---|---|---|
| **सः** | = | அந்த, |
| **ஸ:** | | |
| **मुमुक्षुः** | = | மோக்ஷத்தை விரும்புகிறவர், |
| **முமுக்ஷு:** | | |
| **अन्तर्निष्ठः** | = | உள்ளேயே (ஆத்மாவிலேயே) நிலைத்திருப்பவர், |
| **அந்தர்நிஷ்ட²:** | | |
| **खलु** | = | என்பது பிரஸித்தம். |
| **க²லு** | | |

தான் நடந்தாலும் உட்கார்ந்திருந்தாலும், பார்த்துக் கொண்டிருந்தாலும், படுத்துக்கொண்டிருந்தாலும், எந்த - ஸமயத்திலும் இடைவிடாமல் ஆத்ம தத்வத்தை யே அனுஸந்தானம் செய்துகொண்டிருப்பார் முமுக்ஷுவாயிருப்பவர்.

**(13)**

அவர் வெளிப்பார்வையுள்ளவராய் ஜகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அவருடைய அனுஸந்தானம் எவ்வகையாக இருக்குமென்று அடுத்த சுலோகத்தில் சொல்கிறார்.

**वैराजव्यष्टिरूपं जगदखिलमिदं नामरूपात्मकं स्यात**
**अन्तरस्थप्राणमुख्यात् प्रचलति च पुनर्वेत्ति सर्वान् पदार्थान् |**
**नायं कर्ता न भोक्ताः सवितृत्व दितिः यो ज्ञानविज्ञानपूर्ण**
**साक्षादित्थं विजानन् व्यवहरति परात्मानुसन्धानपूर्वम् ॥ १३ ॥**

**வைராஜவ்யஷ்டிரூபம் ஜக³த³கி²லமித³ம் நாமரூபாத்மகம் ஸ்யாத**
**அந்தரஸ்த²ப்ராணமுக்²யாத் ப்ரசலதி ச புனர்வேத்தி ஸர்வான் பதா³ர்தா²ன் ।**
**நாயம் கர்தா ந போ⁴க்தா: ஸவித்ருத்வ தி³தி: யோ ஜ்ஞானவிஜ்ஞானபூர்ண**
**ஸாக்ஷாதி³த்த²ம் விஜானன் வ்யவஹரதி பராத்மானுஸந்தா⁴னபூர்வம் ॥ 13 ॥**

| | | |
|---|---|---|
| **नाम-रूप-आत्मकं** | = | பெயர் - உருவம் - இவைகளையே |
| **நாம-ரூப-ஆத்மகம்** | | ஸ்வரூபமராயுடைய, |
| **इदं** | = | இந்த, |
| **இத³ம்** | | |
| **जगत्** | = | உலகம், |
| **ஜக³த்** | | |
| **अखिलं** | = | பூராவும், |
| **அகி²லம்** | | |

| | | |
|---|---|---|
| **वैराज व्यष्टिरूपं**<br>**வைராஜ வ்யஷ்டிரூபம்** | = | வீராட்டைச் சேர்ந்த தாயும் (ஸமஷ்டியாயும்) - வியஷ்டியாயும் இருக்கும் தன்மையுடையதாக, |
| **स्यात**<br>**ஸ்யாத** | = | இருக்கும் (அந்த ஜகத்), |
| **अन्त-रस्थ-प्राण-मुख्यात्**<br>**அந்த-ரஸ்த²-ப்ராண-முக்²யாத்** | = | உள்ளே - இருக்கும் - பிராணன் முதலானதினுல், |
| **प्रचलति**<br>**ப்ரசலதி** | = | சேஷ்டிக்கிறது. (உள்ளே சைதன்யமிருப்பதினு லேயே), |
| **सर्वान्**<br>**ஸர்வான்** | = | எல்லா, |
| **पदार्थान्**<br>**பதா³ர்தா²ன்** | = | பதார்த்தங்களையும், |
| **पुन:**<br>**புன:** | = | கூட, |
| **वेत्ति च**<br>**வேத்தி ச** | = | அறிந்தும்கொள்கிறது, |
| **अथं**<br>**அத²ம்** | = | இது (அந்த சைதன்யம்), |
| **कर्ता**<br>**கர்தா** | = | (கர்மாக்களை) செய்பவர், |
| **न**<br>**ந** | = | அல்ல, |
| **भोक्ता:**<br>**போ⁴க்தா:** | = | (கர்ம பலன்களை அனுபவிப்பவரும், |
| **न**<br>**ந** | = | அல்ல; (அவர்), |
| **सवितृत्वत्**<br>**ஸவித்ருத்வத்** | = | "ஸூர்யனைப்போல" |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **ज्ञान-विज्ञान-पूर्ण:**<br>**ஞான-விஜ்ஞான-பூர்ண** | = | (சாஸ்திர ஆசார்யோபதேசத்தினுல் ஏற்பட்ட) ஞானம் - (அதை அப்யாஸம் செய்ததினுல் ஏற்பட்ட) அனுபவும் - இவை நிறைந்தவராக விருந்து, |
| **इत्थं**<br>**இத்த²ம்** | = | இவ்விதம், |

**साक्षात्** = நேரில்,

**ஸாக்ஷாத்**

**विजान न्** = அறிந்து,

**விஜான ன்**

**यः** = எவர் (இருக்கிறுரோ), (அவர்),

**யः**

**पर-आत्म-अनुसन्धान-पूर्वं** = மேலான - ஆத்ம ஸ்வரூபத்தின் - அனுஸந்தா

**பர-ஆத்ம-அனுஸந்தா⁴ன-பூர்வம்** னத்தை முன்னிட்டுக் கொண்டே (உலகத்தில்),

**व्यवहरति** = வியவஹாரம் செய்வார்.

**வ்யவஹரதி**

**वैराज-व्यष्टि-रूपं**

**வைராஜ-வ்யஷ்டி-ரூபம்**

பல மரங்களிருக்கும் இடத்தை பொதுவாக தோப்பு, வனம், என்பார்கள். எல்லாவற்றையும் சேர்த்துப் பார்க்காமல் தனித்தனி மரமாகப் பார்க்கும்போது தோப்பு வனம் என்று சொல்வதில்ஸ. எல்லாவற்றையும் சேர்த்து ஒன்ருக பார்ப்பதை ஸமஷ்டி என்றும், தனித்தனியாக பார்க்கப்படுவதை வியஷ்டி என்றும் சொல்வார் கள். வீடு என்பது ஸமஷ்டி; சுவர், உத்திரம், தூண் என்ருல் வியஷ்டி. சுவர் என்ருல் ஸமஷ்டி; செங்கல்கள் என்ருல் வியஷ்டி. இவ்விதமே உலகம் பூராவையும் ஒன்ருகக் கருதும்போது ஸ்மஷ்டியாகும். அதிலுள்ள ஜீவர்கஊயோ பதார்த்தங்கஊயோ தனித்தனி கவனித்தால் வியஷ்டியாகும். ஆகையால்- உலகத்தை ஸமஷ்டியாகவும் பார்க்கலாம், வியஷ்டியாகவும் பார்க்கலாம். ஸ்தூலமான உலகத்தை பூராவும் தன் சரீரமாகக்கொண்டு அதில் 'நான்' என்று அபிமானம் வைத்துக்கொண்டிருக்கும் சைதன்யத்தை 'விராட்' என்பார்கள். அவரைச் சேர்ந்ததாக ஸமஷ்டி பிரபஞ்சமிகுப் பதிஞல் வைராஜம் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கிறது. ஸமஷ்டியாஞலும் வியஷ்டியாஞலும் அவைகஊ சேஷ்டிக்கும்படிச் செய்யும் சைதன்யம் ஒன்றே. ஆஞலும், அவைகளுக்குள் வியவஹார தசையில் பெயர்கள் வெவ்வேறு, உருவங்கள் வெவ்வேறு என்பதை

**नामरूपात्मकं**

**நாமரூபாத்மகம்**

"பெயர் உருவம் இவைகஊ ஸ்வரூபமாயுடைய" என்ற பதம் தெளிவுபடுத்துகிறது.

**अन्तरस्थ प्राणमुख्यात्**

**அந்தரஸ்த² ப்ராணமுக்²யாத்**

ஸமஷ்டியாகவோ வியஷ்டியாகவோ உலகத்தை சேஷ்டிக்கும்படிச் செய்வதற்கு கிரியா சக்தி வேண்டியிருப்பதால் அதற்கு பிராதான்யம், கொடுத்து “பிராணன்” என்று சொல்லப்பட்டிருக்கிறது. வாஸ்தவத்தில் கிரியா சக்தி, ஞான சக்தி இரண்டுமே சைதன்யத்தைச் சேர்ந்தது. அந்த ஞான சக்தியை உபயோகித்துக்கொண்டு

## वेत्ति सर्वान पदार्थान्

**வேத்தி ஸர்வான பதா³ர்தா²ன்**

எல்லா பதார்த்தங்களையும் அறிகிறது என்று மேலால் சொல்லப்படுகிறது.

சேஷ்டிக்கச் செய்வதினுல் சைதன்யத்திற்கு ‘செய்கிறவர்’ என்ற தன்மை ஏற்படுமோவென்றுல், கிடையாது என்கிறுர்

## नायं कर्ता

**நாயம் கர்தா**

என்ற வார்த்தைகளால், ஸூர்யன் உதயமானுல் ஜனங்கள் எழுந்திருந்து அவரவர்கள் காரியங்களைச் செய்கிறுர்கள் .இதற்காக. இவர்கள் செய்யும் கார்யங்களைச் செய்யும்படி ஸூர்யன் ஏவினுர் என்று ஆகாது. அப்படியே, சைதன்யமிருப்பதினுல்தான் மனஸிற்கு ஸுக துக்கங்களை அனுபவிக்கி முடிகிறது, அதினுல் இவ்வனுபவங்கள் சைதன்யத்தினுடையதாக ஆகாது என்பதை

## न भोक्ता:

**ந போ⁴க்தா꞉**

என்று சொல்கிறுர். ஸூர்யன் தானிருப்புதினுலும் பிரகாசிப்பதினுலும் ஜீவர்களை சேஷ்டிக்கும் படிக்கும் அனுபவிக்கும்படிக்கும் செய்தபோதிலும், அந்த சேஷ்டை யாவது அனுபவமாவது எப்படி வாஸ்தவத்தில் ஸூர்யனிடம் ஸம்பந்தப்பட்டு பாதிக்காதோ, அதேமாதிரி சைதன்யம் இருந்துகொண்டு அறிவு ஸ்வரூபமாயிருப்பதினுல் உலகத்தில் ஸகல வியாபாரங்களும் ஸகலவித அனுபவங்களும் ஏற்பட்டபோதிலும், இவை யாதொன்றும் அந்த சைதன்யத்தினிடம் ஸம்பந்தித்து பாதிக்காது என்பதை விளக்குவதற்காக

## सवितृत्व

**ஸவித்ருத்வ**

ஸூர்யனைப்போல என்று திருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் உலகத்தில் ஏற்படும் எல்லா வியவஹாரங்களையும் அனுபவங்களையும் பார்த்துக் கொண்டிருந்தபோதிலும், அவைகளில் ஸம்பந்தப்படாமல் அவைகளால் பாதிக்கப் படாமல் எப்பொழுதும் ஆத்ம தத்வத்தை அனுஸந்தானம் செய்துகொண்டிருப்பவரே ஞானியாவார் என்று சுலோகத்தின் தாத்பர்யம்.

**(14)**

அவ்வித ஞானமேற்படுவதற்கு முக்கிய ஸாதனமாகிய வைராக்யம் இரண்டு விதமென்று எடுத்துக்காட்டுகிறுர் -

**नैर्वेद्यं ज्ञानगर्भं द्विविधमभिहितं तत्र वैराग्यमाद्यं**
**प्रायो दुःखावलोकात् भवति गृहसुहृत्पुत्रवित्तैषणादेः ।**
**अन्यत् ज्ञानोपदेशात् यदुदितविषये वान्तवत् हेयता स्यात्**
**प्रव्रज्याऽपि द्विधा स्यात् नियमितमनसां देहतो गेहतश्च ॥ १४ ॥**

**நைர்வேத்3யம் ஜ்ஞாநக3ர்ப4ம் த்3விவித4மபி4ஹிதம் தத்ர வைராக்3யமாத்3யம்**
**ப்ராயோ து3ःகா2வலோகாத் ப4வதி க்3ருஹஸுஹ்ருத்புத்ரவித்தைஷணுதே3ः ।**
**அன்யத் ஜ்ஞாேபதே3ஶாத் யது3தி3தவிஷயே வாந்தவத் ஹேயதா ஸ்யாத்**
**ப்ரவ்ரஜ்யா(அ)பி த்3விதா4 ஸ்யாத் நியமிதமனஸாம் தே3ஹதோ கே3ஹதஶ்ச**
**॥ 14 ॥**

| | | |
|---|---|---|
| **तत्र**<br>**தத்ர** | = | அதில் (ஞானமேற்படவேண்டிய விஷயத்தில்), |
| **वैराग्यं**<br>**வைராக்3யம்** | = | ஆசையற்றிருப்பது, |
| **नैर्वेद्यं**<br>**நைர்வேத்3யம்** | = | வெறுப்பினுல் ஏற்படுவது, |
| **ज्ञान-गर्भं**<br>**ஞாந-க3ர்ப4ம்** | = | ஞானத்தை - உள்ளேயுடையது, என்று, |
| **द्विविधं**<br>**த்3விவித4ம்** | = | இரண்டுவிதமாக, |
| **अमभिहितं**<br>**அமபி4ஹிதம்** | = | சொல்லப்பட்டிருக்கிறது, |
| **आद्यं**<br>**ஆத்3யம்** | = | முதலாவது (வெறுப்பினுல் ஏற்படும் வைராக்யம்), |
| **गृहसुहृत्-पुत्र-वित्त-एषणादेः**<br>**க்3ருஹஸுஹ்ருத்-புத்ர-வித்த-ஏஷணுதே3ः** | = | வீடு - நண்பர் - புத்திரன் - சொத்து - இவைகளிலுள்ள ஆசை முதலானதுகளால், |
| **दुःखावलोकात्**<br>**து3ःகா2வலோகாத்** | = | துக்கம் ஏற்படுகிறதென்பதை - பார்ப்பதினுல்தான், |
| **प्रायः**<br>**ப்ராயः** | = | அநேகமாய், |

**भवति** = உண்டாகிறது,
**ப$^{4}$வதி**

**अन्यत्** = மற்றென்று (ஞானத்தையுள்ளே உடையது),
**அன்யத்**

**यत्** = எது,
**யத்**

**उदितं-विषये** = முன்சொன்ன (வீடு முதலிய) - விஷயத்தில்,
**உதி$^{3}$தம்-விஷயே**

**वान्तवत्** = வாயிலெடுத்ததில் போல,
**வாந்தவத்**

**हेयता** = தள்ளிவிட வேண்டியதென்ற எண்ணமாக,
**ஹேயதா**

**स्यात्** = இருக்குமோ (அது),
**ஸ்யாத்**

**ज्ञान-उपदेशात्** = ஞான - உபதேசத்திஞல் (உண்டாகிறது).
**ஞான-உபதே$^{3}$ஶாத்** (அதே மாதிரி),

**प्रव्रज्या** = புறப்படுதல (ஸன்னியாஸம்),
**ப்ரவ்ரஜ்யா**

**अपि** = கூட,
**அபி**

**नियमितं-मनसां** = நன்கு கட்டுப்படுத்தப்பட்ட - மனஸூள்ளவர்
**நியமிதம்-மனஸாம்** களுக்கு,

**देहतः** = சரீரத்திலிருநது என்றும்,
**தே$^{3}$ஹத:**

**गेहतः च** = வீட்டிலிருந்து என்றும்,
**கே$^{3}$ஹத: ச**

**द्विधा** = இரண்டு விதமாக,
**த்$^{3}$விதா$^{4}$**

**स्यात्** = இருக்கும்.
**ஸ்யாத்**

ஒரு பதார்த்தத்தில் ஆசை ஏற்பட வேண்டுமாஞல், அப் பதார்த்தம் நல்லது, அனுகூலமானது, ஸுகத்தைக் கொடுக்கக் கூடியது என்கிற எண்ணமிருந்தால்தான் ஏற்படும். உலகத்தில் ஒரு பதார்த்தமும் பூராவும் நல்லது, எப்பொழுதும் ஸுகத்தையே கொடுக்கும் என்பது கிடையாதென்று முன் 10 வது சுலோகத்தில் சொல்லப் பட்டது. ஆகையால் எல்லா பதார்த்தங்களிலும் நல்லதுடன் கெட்டதும். அனுகூலத்துடன் பிரதிகூலமும், ஸுகத்துடன் துக்கத்தைக் கொடுககும் அம்சமும் கலந்துதான் இருக்கும். அவைகளிலுள்ள நல்ல அம்சத்திற்கு பிராதான்யம் கொடுக்காமல் கெட்ட

அம்சத்திற்கு பிராதான்யம் கொடுத்தால் அவைகளில் உள்ள ஆசை தானுகவே குறையும். கிருஹம், ஸ்திரீ, புத்திராதிகளினுல் பலவிதமாக துக்கமேற்படுகிற தென்பது யாவராலும் அனுபவத்தில் தெரிந்துகொண்ட விஷயமே. அந்த துக்கத்தை நிஜனத்துப் பார்த்து அவைகளில் ஆசையை விடுவது

## नैर्वेद्यं

**நைர்வேத்³யம்**

வெறுப்பினுல் ஏற்படும் வைராக்கியமாகும். ஸாதாரணமாக உலகத்தில் முதலில் வைராக்கியமேற்படுவது இம்முறையில்தான் என்பதை

## प्राय:

**ப்ராய:**

(அநேகமாய்) என்ற பதத்தினுல் குறிக்கிருர்.

இவ்வித வைராக்கியமேற்பட்டு பெரியோர்கஜள அண்டி சாஸ்திரங்கஜளயும் அப்பெரியோர்களின் உபதேச மொழிகஜளயும் கேட்கக் கேட்க, அப்பதார்த்தத்தின் ஸ்வரூபத்தை பரிசீலனம் செய்து பார்க்கும்போது, அதில் ஏதோ கொஞ்சம் நல்ல அம்சம் இருப்பதாகத் தோன்றினதும் வாஸ்தவமில்ஜலயென்றும், அப்பதார்த்தமே வாஸ்தவமில்லாத வெறும் தோற்றமே தவிர வேறில்ஜலயென்றும் தெரியவரும். அப்பொழுது அப்பதார்த்தத்தில் விருப்பமும் இருக்காது, வெறுப்பும் இருக்காது. அந்த நிஜலயை

## ज्ञानगर्भं

**ஞாநக³ர்ப⁴ம்**

ஞானத்தையுள்ளேயுடைய வைராக்கியமென்று சொல்லியிருக்கிருர். அப்பொழுது வாஸ்தவத்தில் வெறுப்பு இல்ஜலயானுலும், கொஞ்சம்கூட விருப்பமில்லாததினுல் அப்பதார்த்தமும் தள்ளுபடி செய்ய வேண்டியதிலேயே சேரும். தள்ளுபடிசெய்ய வேண்டியதென்ற அம்சத்தில் மாத்திரம் திருஷ்டாந்தமாக

## वान्तवत्

**வாந்தவத்**

(வாயிலெடுத்ததுபோல) என்று சொல்லப்பட்டிருக்கிறது. வாயிலெடுத்தது என்று பொதுவாய் சொல்லியிருப்பதினுல், தான் வாயிலெடுத்ததையும் எடுத்துக்கொள்ள லாம், வேறு யாரேனும் வாயிலெடுத்ததையும் எடுத்துக்கொள்ளலாம். தான் வாயிலெடுத்ததுதானே என்று அதை மறுபடியும் எடுத்து சாப்பிடுவது கிடையாது. அதுபோல, தான் அனுபவித்து வந்த விஷயங்கஜள பிரதிகூலமென்ருே ஸாரமற்றதென்ருே விலக்கிவிட்ட பிறகு மறுபடியும் அவைகஜள விரும்புவது கொஞ்சமேனும் நியாயமில்ஜல. பெரியோர்கள் பிரதிகூலமென்ருே ஸாரமற்றதென்

ரே விலக்கிவிட்டு நம்மையும் விலக்கிவிடச் சொல்லும் போது, நாம் அதை எடுத்துக்கொண்டோமேயானல், வேறொருவர் வாயிலெடுத்ததை உட்கொள்வது போலவே ஆகும்.

**प्रव्रज्या**

**ப்ரவ்ரஜ்யா**

"நன்றாக வெளியேறல்" என்பது ஏற்பட்ட அர்த்தம். இதை இரண்டுவிதமாக ஆசார்யர் பிரித்திருக்கிறார், தேஹத்திலிருந்து வெளியேறல், வீட்டிலிருந்து வெளியேறல், என்று. தேஹத்திலிருந்து வெளியேறல் என்பது மரணம் என்று அர்த்தமில்லை. மரணம் என்பது இந்த சரீரத்திற்கு காரணமாகிய பிராரப்தகர்மா முடிந்துவிட்டதே யானல் தானகவே ஏற்படும். அப்பொழுது தேஹத்தை விட்டுவிடுவது ஜீவன் ஸ்வதந்திரமாய் செய்யும் கார்யமேயல்ல. ஆகையால் அவ்வித "வெளியேறலை" அவன் செய்கிறானென்று சொல்லமுடியாது. அவன் ஸ்வதந்திரமாய் செய்யக்கூடிய "வெளியேறல்" தேஹத்தில் நானென்றும் என்னுடையதென்றும் வைத்திருக்கிற அபிமானத்தை விடுவது தான். அந்த அபிமானத்தை ஒருவாறு விட்டால்தான், வீட்டை விட்டு வெளியேறமுடியும். அதினல்தான் "தேஹத்திலிருந்து" என்பதை முதலில் சொல்லிவிட்டு இரண்டாவதாக "வீட்டில் இருந்து" என்று கண்டிருக்கிறார். வீட்டிலிருந்து வெளிக்கிளம்பிய போதிலும் குருவை அடைந்து உபதேசம் பெற்று நன்கு ஆத்மதத்வானுஸந்தானம் நிலைக்கிறவரையில் தேஹத்தில் கொஞ்சம் நானென்பதும் என்னுடையதென்பதும் இருந்தேதீருமானதினல், முதலில் "வீட்டிலிருந்து" என்றும் பின்னல் தேஹத்திலிருந்து என்றும் வரிசையை மாற்றி அர்த்தம் செய்தாலும் தோஷமில்லை. அப்படியே ஒரு வியாக்யாதா அர்த்தம் செய்திருக்கிறார். வைராக்கியத்தை நைர்வேத்யம், ஞானகர்ப்பம் என்று இரண்டு விதமாக சொல்லியிருப்பதை அனுஸரித்து, நைவேத்ய வைரக்கியம் வீட்டை விட்டு வெளியேறலுக்கு முன்னமேயும், வீட்டைவிட்டு வெளியேறினதற்குப் பிற்பாடு ஞானகர்ப வைராக்கியம் என்றும் இருப்பது உசிதமேயாகும். ஆகையால் தேஹாபி மானத்தை விடுவது முதலில் ஸாதனமாகவும் பின்னால் ஸித்தமாகவும் இருந்து வரும்.

**(15)**

வெறுப்பினல் ஏற்படும் வைராக்கியம் துக்கத்தின் அனுபவத்தினல் என்று சொல்லப்பட்டதே, அந்த துக்கம் ஏற்படுவதற்கு நிமித்தம் தேஹத்தில் "நான்" என்கிற எண்ணமும் அதற்கு ஸம்பந்தப்பட்ட பதார்த்தங்களில் "என்னுடையது" என்கிற எண்ணமுந்தான் என்று அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்.

**यः कश्चित् सौख्यहेतोः त्रिजगति यतते नैव दुःखस्य हेतोः**
**देहेऽहंता तदुत्था स्वविषयममता चेति दुःखास्पदे द्वे ।**
**जानन् रोगाभिघाताद्यनुभवति यतोऽनित्यदेहात्मबुद्धिः**
**भार्या पुत्रार्थनाशे विपदमथ परामेति नारातिनाशे ॥ १५ ॥**

**யஃ கஶ்சித் ஸௌக்²யஹேதோஃ த்ரிஜக³தி யததே நைவ து³ஃக²ஸ்ய ஹேதோஃ**
**தே³ஹே(அ)ஹந்தா தது³த்தா² ஸ்வவிஷயமமதா சேதி து³ஃகா²ஸ்பதே³ த்³வே ।**
**ஜானன் ரோகா³பி⁴கா⁴தாத்³யனுப⁴வதி யதோ(அ)நித்யதே³ஹாத்மபு³த்³தி⁴ஃ**
**பா⁴ர்யா புத்ரார்யநாஶே விபத³மத² பராமேதி நாராதிநாஶே ॥ 15 ॥**

| | | |
|---|---|---|
| **त्रि-जगति** | = | மூன்று - உலகத்திலும், |
| **த்ரி-ஜக³தி** | | |
| **यः कश्चित्** | = | யாராயிருந்தாலும், |
| **யஃ கஶ்சித்** | | |
| **सौख्य-हेतोः** | = | ஸுகம்வேண்டுமென்ற - காரணத்தினுலேயே, |
| **ஸௌக்²ய-ஹேதோஃ** | | |
| **यतते** | = | யத்தினம் செய்கிறுன், |
| **யததே** | | |
| **दुःखस्य** | = | துக்கம் வேண்டுமென்ற, |
| **து³ஃக²ஸ்ய** | | |
| **हेतोः** | = | காரணத்திற்காக, |
| **ஹேதோஃ** | | |
| **न एव** | = | யத்தினம் செய்வதே கிடையாது, |
| **ந ஏவ** | | |
| **देहे** | = | சரீரத்தில், |
| **தே³ஹே** | | |
| **अहंता** | = | "நான்" என்கிற பாவனையும், |
| **அஹந்தா** | | |
| **तत् उत्था** | = | அந்த பாவனையிலிருந்து ஏற்படுகிற, |
| **தத் உத்தா²** | | |
| **स्व-विषय-ममता** | = | தனக்கு விஷயமாயுள்ள பதார்த்தங்களில் - |
| **ஸ்வ-விஷய-மமதா** | | "என்னுடையது" என்கிற பாவனையும், |
| **इति** | = | என்ற, |
| **இதி** | | |
| **द्वे** | = | இரண்டும், |
| **த்³வே** | | |
| **दुःख-आस्पदे** | = | துக்கத்திற்கு - காரணங்கள், |
| **து³ஃக²-ஆஸ்பதே³** | | |
| **यतः** | = | ஏனென்றுல், |
| **யதஃ** | | |
| **जानन्** | = | (சரீரம், தானில்லையென்று) தெரிந்து |
| **ஜானன்** | | கொண்டிருப்பவனுயிருந்தும், |

| | | |
|---|---|---|
| **अनित्य-देह-आत्म-बुद्धिः** <br> **அநித்ய-தே$^{3}$ஹ-ஆத்ம-பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ঃ** | = | அநித்யமான - சரீரத்தில் - தான் என்கிற - எண்ணமுள்ளவனாய் (அந்த சரீரத்தைச் சேர்ந்த), |
| **रोग-आभिघातादि** <br> **ரோக$^{3}$-ஆபி$^{4}$கா$^{4}$தாதி$^{3}$** | = | வியாதி - அடி - முதலியதை (தன்னைச் சேர்ந்த தென்று), |
| **अनुभवति** <br> **அனுப$^{4}$வதி** | = | அனுபவிக்கிறன், |
| **अथ** <br> **அத$^{2}$** | = | அத்துடன், (தன்னுடையது என்று எண்ணிக் கொண்டிருக்கிற), |
| **भार्या-पुत्र-अर्य-नाशे** <br> **பா$^{4}$ர்யா-புத்ர-அர்ய-நாஶே** | = | பார்யை - புத்திரன் - சொத்து - இவைகளுக்கு நாசம் ஏற்படும் போது (தனக்கே நாசம் ஏற்பட்டது போல்), |
| **परां** <br> **பராம்** | = | அதிகமான, |
| **विपदं** <br> **விபத$^{3}$ம்** | = | துக்கத்தை, |
| **एति** <br> **ஏதி** | = | அடைகிறன், (தன்னைச் சேராததாக பாவிக்கப்படுகிற), |
| **अराति-नाशे** <br> **அராதி-நாஶே** | = | சத்துருவிற்கு நாசம் ஏற்பட்டால், |
| **न** <br> **ந** | = | துக்கத்தையடைவதில்லை. |

**यः कश्चित्**

**யঃ கஶ்சித்**

"யாரும்" என்றுசொல்லியிருப்பதால் சிறு புழு முதல் நான்முகன் வரையில் ஸகலஜீவர்களையும் குறிக்கும். எல்லா ஜீவர்களுடைய பிரயத்தினம் ஸுகத்தை உத்தேசித்தே ஏற்பட்டிருந்தபோதிலும், யாரும் துக்கத்தை உத்தேசித்து பிரயத்தினம் செய்வது கிடையாதென்று இருந்த போதிலும், உலகத்தில் துக்கம் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கிறதென்பது. அனுபவத்தில் நன்றுக தெரிகிறது. இதற்கு காரணம் நாசத்தையடையக்கூடிய சரீரத்தில் "நான்" என்ற எண்ணமும், அப்படியே அதை யொட்டி நாசத்தையடையக் கூடிய பதார்த்தங்களில் 'என்னுடையது' என்ற எண்ணமும், என்கிறுர். விரோதியாயிருப்பவனிடம் "நான்" என்றுவது "என்னைச் சேர்ந்தவன்" என்றுவது எண்ணமேயில்லாததினுல், அவனுக்கு ஏதேனும் கெடுதல் வந்தால் நாம் துக்கப்படுவதில்லை. சரீரத்தில் 'நான்' என்ற எண்ணம் இராமலிருந்தால் அதிலுள்ள வியாதி முதலியவைகளால் ஜீவன் பீடிக்கப்படமாட்டான். அப்பிடியே மனைவி மக்கள் முதலியவைகளில் "என்னைச்சேர்ந்தது" என்ற எண்ணமிராமலிருந்தால் அவர்களுக்கு ஏற்படும் கெடுதல்களினுல் இவன் பீடிக்கப்படமாட்டான்.

**नित्यदेहात्मबुद्धिः**

**நித்யதே³ஹாத்மபு³த்³தி⁴ஃ**

என்று பாடமிருக்கும் பக்ஷத்தில் "எப்பொழுதும் தேஹத்தில் ஆத்மா என்ற எண்ணம்" என்று அர்த்தம் செய்துகொள்ளவேண்டும் 4 வது சுலோகத்தில்

**अनित्य-देहात्मबुद्धिः**

**அநித்ய-தே³ஹாத்மபு³த்³தி⁴ஃ**

என்று வந்திருப்பதால் அப்படிவே இங்கேயும் இருப்பதுதான் உசிதமாகத் தோன்றுகிறது.

**(16)**

சரீரத்தில் கொஞ்சம் விவேகத்தினுல் "நான்" என்ற பாவனையை விட்டு விட்டாலும் அதில் 'என்னுடையது' என்ற பாவனை விலகாது போலிருக்கிற தேயென்றல் அதுவும், ஸாத்தியந்தான்; வீட்டை விட்டு வெளியேறுவதற்கு ஏதேனும் காரணத்தினுல் முடியாமல் போனுலும், அங்கே இருந்துகொண்டே சரீரத்திலும் வீடு முதலியவைகளிலும் "என்னுடையது" என்ற எண்ணமில்லாமல் இருக்கமுடியும் என்பதை திருஷ்டாந்தத்தினுல் தெளிவுபடுத்துகிறுர்.

**तिष्ठन् गेहे गृहेशोऽप्यतिथिरिव निजं धाम गन्तुं चिकीर्षुः**
**देहस्थं दुःखसौख्यं न भजति सहसा निर्ममत्वाभिमानः ।**
**आयात्रायास्यतीदं जलदपटलवत् यातृ यास्यत्यवश्यं**
**देहाद्यं सर्वमेव प्रविदितविषयो यश्च तिष्टत्ययत्नः ॥ १६ ॥**

**திஷ்ட²ன் கே³ஹே க்³ருஹேஶோ(அ)ப்யதிதி²ரிவ நிஜம் தா⁴ம க³ந்தும் சிகீர்ஷுஃ**
**தே³ஹஸ்யம் து³ஃக²ஸௌக்²யம் ந ப⁴ஜதி ஸஹஸா நிர்மமத்வாபி⁴மானஃ ।**
**ஆயாத்ராயாஸ்யதீத³ம் ஜலத³படலவத் யாத்ரு யாஸ்யத்யவஶ்யம்**
**தே³ஹாத்³யம் ஸர்வமேவ ப்ரவிதி³தவிஷயோ யஶ்ச திஷ்டத்யயத்னஃ ॥ 16 ॥**

**निजं** = தன்னுடைய சொந்தமான,
**நிஜம்**

**धाम** = இருப்பிடம்,
**தா⁴ம**

**गन्तुं** = போக,
**க³ந்தும்**

**चिकीर्षुः** = விரும்புகிற,
**சிகீர்ஷுஃ**

| | | |
|---|---|---|
| **अतिथिः इव**<br>**அதிதி²: இவ** | = | அதிதியைப் போலவே, |
| **गृहेशः अपि**<br>**க்³ருஹேஶ: அபி** | = | வீட்டிற்கு யஜமானனுய் (கிரஹஸ்தனுய்)<br>இருந்தபோதிலும், |
| **गेहे**<br>**கே³ஹே** | = | வீட்டில், |
| **तिष्ठन्**<br>**திஷ்ட²ன்** | = | இருந்து வருபவன், |
| **देहस्यं**<br>**தே³ஹஸ்யம்** | = | சரீரத்திலுள்ள, |
| **दुःखसौख्यं**<br>**து³:க²ஸௌக்²யம்** | = | துக்கத்தையும் - ஸுகத்தையும், |
| **निर्ममत्व-अभिमानः**<br>**நிர்மமத்வ-அபி⁴மான:** | = | "என்னுடையது" என்ற அபிமானமில்லாதவனுக, |
| **सहसा**<br>**ஸஹஸா** | = | உடனே, |
| **न भजति**<br>**ந ப⁴ஜதி** | = | அடைவதில்லை, |
| **आयातृ**<br>**ஆயாத்ரு** | = | அவசியம் வர வேண்டியதாயுள்ள, |
| **इदं**<br>**இத³ம்** | = | இது, |
| **आयात्रायति**<br>**ஆயாத்ராயதி** | = | வந்தேதீரும், |
| **जलद-पटलवत्**<br>**ஜலத³-படலவத்** | = | மேக - வரிசையைப் போல; |
| **यात्**<br>**யாத்** | = | போவதும், |
| **अवश्यं**<br>**அவஶ்யம்** | = | அவசியம், |
| **यास्यति**<br>**யாஸ்யதி** | = | போயே தீரும், |
| **एवं**<br>**ஏவம்** | = | இப்படியே தான், |
| **देहाद्यं**<br>**தே³ஹாத்³யம்** | = | தேஹம் முதலானது, |

| | | |
|---|---|---|
| **सर्वं** | = | எல்லாமும் என்று, |
| **ஸர்வம்** | | |
| **यः** | = | எவர், |
| **யஃ** | | |
| **विदित-विषयः** | = | விஷயம் அறிந்தவரோ (அவர்), |
| **விதி³த-விஷயஃ** | | |
| **अयत्नः च** | = | பிரயத்தினம் செய்யாமலே, |
| **அயத்னஃ ச** | | |
| **तिष्ठति** | = | இருப்பார். |
| **திஷ்டதி** | | |

**निजं धाम**

**நிஜம் தா⁴ம**

அதிதியானவர் ஒரு வீட்டிற்கு வந்திருந்த போதிலும், தான் போய்ச் சேர வேண்டியது தன் சொந்தமான வீடு என்பதை எப்படி மறக்கமாட்டாரோ, அப்படியே ஜீவனும் ஏதோ காமகதியினுல் ஒரு சரீரத்தில் வந்திருக்கும்படி நேரிட்ட போதிலும், தான் போய்ச்சேர வேண்டிய சாசுவதமான தன் சொந்தமான இடம் பிரஹ்ம ஸ்வரூபநிஜல என்பதை மறந்துவிடக்கூடாது என்று தாத்பர்யம்.

**देहस्यं**

**தே³ஹஸ்யம்**

(சரீரத்திலுள்ள) என்று சுலோகத்தில் கண்டிருந்த போதிலும்

**गेहस्यं**

**கே³ஹஸ்யம்**

(வீட்டிலுள்ள) என்றதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**निर्ममत्वाभिमानः**

**நிர்மமத்வாபி⁴மானஃ**

('என்னுடையது' என்ற அபிமானம் இல்லாதவன்) என்பதை அதிதி ஸம்பந்தப் பட்ட மட்டில் அவன் தங்கியிருக்கும் வீட்டையும், ஜீவன் ஸம்பந்தப்பட்ட மட்டில் அவன் இப்பொழுது அடைந்திருக்கும் தேஹத்தையும் அந்த தேஹம் இப்பொழுது குடியிருந்து வரும் வீடு, குடும்பம், ஊர், தேசம், லோகம், எல்லாவற்றையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அதிதி எப்படி தான் தங்கியிருக்கும் வீட்டை தன்னு

டையதென்று நினைக்கமாட்டானே, அப்படியே ஜீவனும் தன் சரீரம், வீடு முதலிய வைகளை தன்னுடையதென்று நினைப்பது உசிதமில்லை.

**जलदपटलवत्**

**ஜலத³படலவத்**

(மேக வரிசையைப்போல) - மேகத்திற்கு எவ்வித ஸ்வாதந்திரியமில்லாமல் காற்று கொண்டுபோகுமிடம் எல்லாம் போய்க்கொண்டும் அக்காற்று சிதறடித்து விட்டால் சிதறியும்போய்விடுகிறதோ, அதேமாதிரி பிராரப்த கர்மாவின் வேகத்தைத் தடுக்க எவ்வித ஸ்வாதந்திரியமுமில்லாமல் ஜீவன் அக்கர்மாவினுல் ஏற்படும் ஸுக துக்க அனுபவங்களை அனுப்பவித்தே தீரவேண்டும். இவனுடைய விருப்பத்தை யாவது பிரயத்தினத்தையாவது அபேக்ஷிக்காமல் அவ்வனுபவங்கள் தாளுகவே ஏற்படுமானதினுல், இவன் ஸுகம் வேண்டுமென்று விரும்பிப் பிரயத்தினம் செய்வத ற்கோ, துக்கம் விலகவேண்டும் என்று விரும்பி அதற்காகப் பிரயத்தினம் செய்வதற் கோ, வாஸ்தவத்தில எவ்வித அவசியமும் கிடையாது. இந்த தத்வத்தை அறியாதவர்கள்தான் ஸுகப் பிராப்திக்காகவும் துக்க நிவிருத்திக்காகவும் பிரவிருத்தி செய்வார்கள்; அறிந்தவர்கள் எவ்வித பிரயத்தினமும் செய்யமாட்டார்கள்.

**देहाद्यं**

**தே³ஹாத்³யம்**

(தேஹம் முதலானது) - அவ்விதம் தாளுகவே இவனை எதிர்பாராமல் இவனைக் கேட்காமல் வந்துபோகும் பதார்த்தங்களில் சரீரமும் சேர்ந்தது என்பதை ஞாபகப் படுத்துகிருர். இன்னவிதமான பிறவி ஏற்படவேண்டும், இவ்வளவு காலம் ஜீவித்திரு க்க வேண்டும், இவ்விதமான போகங்களை அனுபவிக்கவேண்டும் என்று தீர்மானிக்க ஜீவனுக்கு அதிகாரமே இல்லை. அவையாவும் முன் செய்திருக்கும் கர்மாவை அனுஸரித்து முன்னமேயே தீர்மானிக்கப்பட்டவைகளேயாகும். அவைகள் ஏற்படு வதை இவன் பார்த்துக்கொண்டிருப்பதைத் தவிர இவன் செய்யவேண்டியதோ, செய்யக்கூடியதோ யாதொரு பிரயத்தினமும் கிடையாது.

**(17)**

முன் 14 வது சுலோகத்தில் வீட்டை விட்டுப் போவதற்குமுன் தேஹாதிகளில் வைராக்கியம் ஸாதன ரூபமாய் ஏற்பட்டிருக்க வேண்டுமென்றும், வீட்டை விட்டுப் போனபிறகு தேஹாதிகளில் வைராக்கியம் திருடப்பட்டு ஸாத்யரூபமாக ஆகுமெ ன்று சொல்லப்பட்டது. அவ்வித திருடமான வைராக்கியமேற்பட்டுவிட்ட போதிலும், சரீரம் இருக்கிற வரையில் பசிதாஹமிருக்குமே? அவைகளை நிவிருத்தி செய்வதற்காவது சரீரத்தில் 'தான்' என்ற எண்ணமும் அதினுல் ஏற்படக்கூடிய ஸுக துக்க அனுபவமும் ஏற்பட்டுதானே தீரும்? அப்பொழுது தத்வமறிந்தவன் எப்படி இருப்பானென்பதை அடுத்த சுலோகத்தில் காட்டுகிருர் -

**शक्त्या निर्मोकतः स्वात् बहिरहिरिव यः प्रव्रजन् स्वीयगेहात्**
**छायां मार्गद्रुमोत्थां पथिक इव मनाक् संश्रयेत् देहसंस्थाम् ।**
**क्षुत्पर्याप्तं तरुभ्यः पतितफलमयं प्रार्थयेत् भैक्षयमन्नं**
**स्वात्मारामं प्रवेष्टुं स खलु सुखमयं प्रव्रजेत् देहतोऽपि ॥ १७ ॥**

**ஶக்த்யா நிர்மோகத: ஸ்வாத் ப³ஹிரஹிரிவ ய: ப்ரவ்ரஜன் ஸ்வீயகே³ஹாத்**
**சா²யாம் மார்க³த்³ருமோத்தா²ம் பதி²க இவ மனாக் ஸம்ஶ்ரயேத் தே³ஹஸம்ஸ்தா²ம் ।**
**க்ஷுத்பர்யாப்தம் தருப்⁴ய: பதிதப²லமயம் ப்ரார்த²யேத் பை⁴க்ஷயமன்னம்**
**ஸ்வாத்மாராமம் ப்ரவேஷ்டும் ஸ க²லு ஸுக²மயம் ப்ரவ்ரஜேத் தே³ஹதோ(அ)பி ॥ 17 ॥**

**स्वात्** = தன்னுடைய,
**ஸ்வாத்**

**निर्मोकतः** = சட்டையிலிருந்து,
**நிர்மோகத:**

**अहिः** = பாம்பு,
**அஹி:**

**बहिः** = வெளியே,
**ப³ஹி:**

**इव** = (போவது) போல,
**இவ**

**यः** = எவர்,
**ய:**

**शक्त्या** = வைராக்கிய பலத்தினால்,
**ஶக்த்யா**

**स्वीय-गेहात्** = தன் வீட்டிலிருந்து,
**ஸ்வீய-கே³ஹாத்**

**प्रव्रजन्** = வெளியே போகிறவர்,
**ப்ரவ்ரஜன்**

**पथिकः** = வழிப் போக்கன்,
**பதி²க**

**मार्ग-द्रुम-उत्थां** = வழியிலிருக்கும் - மரத்தினால் - ஏற்படும்,
**மார்க³-த்³ரும-உத்தா²ம்**

**छायां** = நிழலை,
**சா²யாம்**

**इव** = (எப்படி ஆசிரயிப்பானோ அதைப்) போல,
**இவ**

| | | |
|---|---|---|
| **देह-संस्थां** | = | சரீரத்தில் - இருப்பதை, |
| **தே³ஹ-ஸம்ஸ்தா²ம்** | | |
| **मनाक्** | = | ஏதாவது ஸமயத்தில், |
| **மனாக்** | | |
| **संश्रयेत्** | = | ஆசிரயிப்பார், |
| **ஸம்ஶ்ரயேத்** | | |
| **तरुभ्यः** | = | மரங்களிலிருந்து, |
| **தருப்⁴ய꞉** | | |
| **क्षुत्-पर्याप्तं** | = | பசியைப் போக்குவதற்கு - போதுமான, |
| **க்ஷுத்-பர்யாப்தம்** | | |
| **पतित-फल-मयं** | = | உதிர்ந்த - பழங்கள் - ஆகிய, |
| **பதித-ப²ல-மயம்** | | |
| **भैक्षं** | = | பிக்ஷையால் கிடைக்கும், |
| **பை⁴க்ஷம்** | | |
| **अन्नं** | = | ஆஹாரத்தை, |
| **அன்னம்** | | |
| **प्रार्थयेत्** | = | விரும்புவார், |
| **ப்ரார்த²யேத்** | | |
| **सः** | = | அவர், |
| **ஸ꞉** | | |
| **सुखमयं** | = | ஆனந்தஸ்வரூபமான, |
| **ஸுக²மயம்** | | |
| **स्व-आत्म-आरामं** | = | தன் - ஆத்மாவாகிற - உத்யான வனத்தை, |
| **ஸ்வ-ஆத்ம-ஆராமம்** | | |
| **प्रवेष्टुं** | = | பிரவேசிப்பதற்காக, |
| **ப்ரவேஷ்டும்** | | |
| **खलु** | = | அல்லவா, |
| **க²லு** | | |
| **देहतः अपि** | = | தேஹத்திலிருந்தும் கூட, |
| **தே³ஹத꞉ அபி** | | |
| **प्रव्रजेत्** | = | வெளியேறுவார். |
| **ப்ரவ்ரஜேத்** | | |

பாம்பின் சட்டை அதன் சரீரத்துடன் ஒட்டிக்கொண்டிருக்கும்போது அதையும் சேர்த்து 'தான்' என்று பாவித்துக் கொண்டிருக்கும். பிறகு அந்த சட்டை முற்றி தனியாக எடுத்து விடக்கூடிய பக்குவதசை ஏற்பட்டவுடன், அதில் ‘தான்' என்றோ 'தன்னுடையது' என்றோ, எண்ணம் போய்விடுவதால், அந்தப் பாம்பு தானுகவே அந்த சட்டையை கழற்றிவிட்டு அதை கொஞ்சமேனும் கவனிக்காமல், அதினுல் கட்டுப்

படாமல், ஸ்வதந்திரமாக வெளியே போய்விடுகிறது. அப்படியேதான், தத்வமறிந்த வரும் வீட்டில் 'தான், தன்னுடையது' என்ற எண்ணம் போய்விட்டவுடன் வீட்டை விட்டு வெளிக்கிளம்பி விடுவார். அவ்வளவு ஸுலபமாக பிராரப்த கர்மா இருக்கும் வரை சரீரத்தை விட்டுப்போக முடியாததினுல், அந்த சரீரம் கூடவே இருந்து வரும். அதற்கு பசி, தாஹம் ஏற்படும்போது, அதை நிவிருத்தி செய்யவேண்டியதற்காக அவரும் அந்த ஸமயத்தில் மாத்திரம் கொஞ்சம் 'தன்னுடையது' என்று பாவிக்க நேரிடும்; ஆனுல் அதற்காக விசேஷ பிரயத்தினம் ஒன்றும் செய்யமாட்டார். வழி நடப்பவன் வெய்யில் கடுமையாயிருந்தால் மரத்து நிழலில் தங்குவதினுல் அந்த மரம். தன்னுடையதுதான் என்று நிஜைப்பது உண்டோ? அதுபோல்தான். இவரும் சரீரத்தை ஆசிரயிப்பதும் மரத்திலுள்ள பழத்தை தாஞக பறிக்காமல் அதுவாக கீழே விழுந்ததேயாஞல் அதை ஆஹாரமாக உட்கொள்வார். அதுவும் பசியாகிற வியாதிக்கு மருந்து என்ற முறையிலேயே கிரஹிக்கிறபடியால் அவசியத்திற்கு மேல் கிரஹிக்கமாட்டார். அடுத்த வேஜளக்கு வேண்டுமென்று எடுத்துக்கொண்டும் போகமாட்டார். இவ்விகம் பசித்தஸமயம் பிக்ஷை எடுத்துவரும் ஞானி வாஸ்தவத்தில் தேஹத்கிலிருந்தும் வெளிக்கிளம்பினவரே தேஹமேயில்லாத நிஜல விதேஹ கைவல்ய தசையில் ஏற்படுவதாயிருந்த போதிலும், அதற்கு முன்பே ஜீவன் முக்த தசையில் சரீரத்தில் "தான், தன்னுடையது" என்கிற அபிமானம் இல்லாத காரணத்தினுல் அப்பொழுதே சரீரத்திலிருந்து வெளியேறினவரேயாவார்.

**पतितफलमयं**

**பதிதப²லமயம்**

என்பதை

**पतितफलं** (கீழே உதிர்ந்த பழம்)

**பதிதப²லம்**

**अयं** (இவர்)

**அயம்**

என்று இரண்டு வார்த்தைகளாகவும் எடுத்துக் கொள்ளலாம். அப்படி எடுத்துக் கொண்டால், பழம்தான் ஆஹாரமென்பதில்ஜல, பிக்ஷையெடுப்பதினுல் கிடைப்பதும் ஆஹாரமாகும் என்று தாத்பர்யம் கிடைக்கும்.

**स्वात्मारामं -**

**ஸ்வாத்மாராமம்** -

தன்னுடைய ஆத்மா ஸந்தோஷமாக இருக்கக்கூடிய நிஜல, என்று பொதுவாகவும் அர்த்தம் செய்யலாம்?

**खलु**

**க²லு**

அல்லவா? என்று பிரஸித்தியைக் காட்டுகிறுர். அதாவது, தன்னுடைய சொந்த வீட்டிற்குப் போய்ச்சேரவேண்டு மென்ற ஆவலுடன் போய்க்கொண்டிருக்கும் வழிப்போக்கன் நிழலுக்காக ஒரு மரத்தடியில் கொஞ்சம் ஒதுங்கினுலும், அங்கே கீழே கிடக்கும் ஏதேனும் பழத்தை சாப்பிட்டாலும், அந்த மரம் யார் வைத்து உண்டு பண்ணினது என்று விசாரப்படுவாஞ? அவன்தான் அந்த மரம் நன்கு வளர வேண்டுமென்று நிஜனத்து அதற்கு உரம் போடுவாஞ? ஜலம் தான் பாய்ச்சுவாஞ? அதே மாதிரி ஞானியானவர். சரீரத்தைப் பற்றி எவ்வித கவஜலயும் படமாட்டார். அதை போஷிப்பதற்காக எவ்வித பிரயத்தினமும் செய்யமாட்டார். முந்தின சுலோகத்தில் சொன்னபடி. உதாஸீனமாகவேயிருப்பார் இந்த நிஜலயைத்தான் தேஹ த்தை விட்டு வெளியேறல் என்கிறுர் ஆசார்யார்.

**(18)**

16 வது சுலோகத்தில் "நான்" என்பதும் அதிலிருந்து ஏற்படும் "என்னுடையது" என்பதுந்தான் துக்கத்திற்குக் காரணம் என்று சொல்லி அந்த "என்னுடையது" என்று எண்ணத்தை விட்டவன் எப்படியிருப்பானென்பதை 16, 17 சுலோகங்களில் காட்டினுர். இனி அவ்வெண்ணம் எவ்விதம் துக்கத்திற்குக் காரணமாகிறதென்பதை விவரித்துக் கூறுகிறுர்.

**कामो बुद्धावुदेति प्रथममिह मनस्युद्दिशत्यर्थजातं**
**तत् गृह्णातीन्द्रियास्यैः तदनधिगमतः क्रोध आविर्भवेश्च ।**
**प्राप्तावर्थस्य संरक्षणमतिरुदितो लोभ एतत् त्रयं स्यात्**
**सर्वेषां पातहेतुः तदिह मतिमता त्याज्यमध्यात्मयोगात् ॥ १८ ॥**

**காமோ பு3த்3தா4வுதே3தி ப்ரத2மமிஹ மனஸ்யுத்3தி3ஶத்யர்த2ஜாதம்**
**தத் க்3ருஹ்ணுதீந்த்3ரியாஸ்யை: தத3னதி4க3மத: க்ரோத4 ஆவிர்ப4வேஶ்ச ।**
**ப்ராப்தாவர்த2ஸ்ய ஸம்ரக்ஷணமதிருதி3தோ லோப4 ஏதத் த்ரயம் ஸ்யாத்**
**ஸர்வேஷாம் பாதஹேது: ததி3ஹ மதிமதா த்யாஜ்யமத்4யாத்மயோகா3த் ॥18॥**

**इह** = இங்கே,
**இஹ**

**अर्थ-जातं** = (சப்தம் முதலிய) விஷய - ஸமூஹத்தை,
**அர்த2-ஜாதம்**

**मनसि** = மனஸானது,
**மனஸி**

**उद्दिशति** = குறிவைத்ததேயானுல்,
**உத்3தி3ஶதி**

**प्रथमं** = முதலில்,
**ப்ரத2மம்**

| | | |
|---|---|---|
| **बुद्धौ**<br>**பு³த்³தௌ⁴** | = | புத்தியில், |
| **कामः**<br>**காம:** | = | ஆசை, |
| **उदेति**<br>**உதே³தி** | = | உண்டாகிறது |
| **तत्**<br>**தத்** | = | அதை, |
| **इन्द्रिय-आस्यैः**<br>**இந்த்³ரிய-ஆஸ்யை:** | = | இந்திரியங்கள் - மூலமாக, |
| **गृह्णाति**<br>**க்³ருஹ்ணாதி** | = | கிரஹித்துக் கொள்கிறன், |
| **तत्-अनधिगमतः**<br>**தத்-அனதி⁴க³மத:** | = | அது - கிடைக்காமலிருந்தால், |
| **क्रोधः च**<br>**க்ரோத⁴: ச** | = | கோபமும், |
| **आविर्भवेत्**<br>**ஆவிர்ப⁴வேத்** | = | வெளிக்கிளம்பும், |
| **अर्थस्य**<br>**அர்த²ஸ்ய** | = | பதார்த்தம், |
| **प्राप्तौ**<br>**ப்ராப்தௌ** | = | கிடைத்து விட்டதேயானல், |
| **संरक्षण-मति**<br>**ஸம்ரக்ஷண-மதி** | = | அதை நன்கு பாதுகாக்க வேண்டுமென்ற<br>- எண்ணம், |
| **लोभः**<br>**லோப⁴:** | = | லோபம், |
| **उदितः**<br>**உதி³த:** | = | என்று சொல்லப்படுகிறது, |
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **त्रयं**<br>**த்ரயம்** | = | (காமம், கோபம், லோபம் ஆகிய) மூன்றும், |
| **सर्वेषां**<br>**ஸர்வேஷாம்** | = | எல்லாருக்குமே, |
| **पात-हेतुः**<br>**பாத-ஹேது:** | = | கீழ் வீழ்ச்சிக்கு காரணம், |

| | | |
|---|---|---|
| तत्<br>தத் | = | ஆகையால் (அல்லது, இந்த மூன்றும்), |
| इह<br>இஹ | = | இங்கே, |
| मतिमता<br>மதிமதா | = | புத்தியுள்ளவனுல், |
| अध्यात्म-योगात्<br>அத்⁴யாத்ம-யோகா³த் | = | ஆத்ம ஸ்வரூபத்தை - அனுஸந்தானம் பண்ணுவதால், |
| त्याज्यं<br>த்யாஜ்யம் | = | தள்ளத்தகுந்தது. |

ஸ்ரீமத் பகவத்கீதையில், ஒரு பதார்த்தத்தைப்பற்றி மனஸ் அடிக்கடி நிஜனத்துப் பார்த்தால் அதில் பற்றுதல் ஏற்படுகிறது, அந்தப் பற்றுதலிலிருந்து ஆசை ஏற்படு கிறது,

**ध्यायतो विषयान् पुंसः सङ्गस्तेषूपजायते।**
**सङ्गात् संजायते कामः कामात् क्रोधोऽभिजायते॥ II-68**

**த்⁴யாயதோ விஷயான் பும்ஸः ஸங்க³ஸ்தேஷூபஜாயதே ।**
**ஸங்கா³த் ஸஞ்ஜாயதே காமः காமாத் க்ரோதோ⁴(அ)பி⁴ஜாயதே ॥ II-68**

என்று சொல்லியிருக்கிறதை அனுஸரித்து மேலே இந்த சுலோகம் முதல் பாதத்திற்கு அர்த்தம் செரல்லப்பட்டிருக்கிறது. சிலர்

**उद्दिशति:**

**உத்³தி³ஶதிः**

என்ற வார்த்தையை ஏழாம் வேற்றுமை ஏகவசனமாக எடுத்துக்கொள்ளாமல் 'உத்தேசிக்கிறது' என்று விஜனச் சொல்லாகவே எடுத்துக்கொள்கிறுர்கள். அவ்விதம் எடுத்துக் கொண்டால் 'மனஸில் விஷய ஸமூஹத்தை உத்தேசிக்கிறுன்' என்று அர்த்தம் செய்யவேண்டிவரும், அதாவது அந்த பதார்த்தத்தை அடையவேண்டும் என்று தீர்மானித்துக்கொள்கிறுன் என்று சொல்லவேண்டும்.

மனஸ் பதார்த்தத்தைப்பற்றி நிஜனக்கலாம், ஆசைப்படலாம்; ஆனுல் அதை அனுபவிப்பதற்கு இந்திரியங்கள் மூலமாய்த்தான் முடியும் என்பதை

**इन्द्रियास्यैः**

**இந்த்³ரியாஸ்யைः**

என்ற பதம் காட்டுகிறது. அத்துடன், இந்திரியங்கள் கருவிகளே தவிர, ஸூகத்துக்கு அனுபவம் மனஸிற்குத்தான் என்பதையும் காட்டுகிறது. இந்திரியங்களுக்கும்

பதார்த்திற்கும் ஸம்பந்தமிருந்தபோதிலும், அந்த இந்திரியங்களுடன் மனஸ் ஸம்பந்தப்படாமலிருந்தால் எவ்வித அனுபவமும் ஏற்படாது.

ஆசைக்கு விஷயமான பதார்த்தம் கிடைப்பதற்கு ஏதேனும் இடைஞ்சல் ஏற்பட்டால், அவ்வாசையே கோபமாக மாறுகிறது. பதார்த்தம் கிடைத்துவிட்டால், அது தன்னைவிட்டு விலகவே கூடாது என்ற பிடிமானம்தான் லோபம் எனப்படுகிறது. ஆகையால் காமம், குரோதம், லோபம் மூன்றுமே ஒரே மனோ விருத்தியின் மாறுதல்களேயாகும். மனஸ் சாந்தமாய் அடங்கி இருந்ததை முதலில் ஆசை ஏற்பட்டுக் கலக்கிவிடுகிறது, பிறகு குரோதம் ஏற்படும்போது அதிகமான கலக்கத்தை அடைகிறது. லோபமாக மாறும்போது தமோகுணம் மேலிடுகிறது.ஆக இம் மூன்றுமே சாந்தியைக் கெடுத்து ஜீவனை துன்பத்திற்கு ஆளாக்குகின்றன. இவைக ளுக்கு அவன் இடம் கொடுத்துவிட்டால் மதம், மாத்ஸரியம், அஸூயை முதலிய துர்குணங்கள் ஏற்படுகின்றன. அவைகளால் தூண்டப்பட்டு பாபம்செய்யத் துணிந்து விடுகிறான். அதன் பலனாக துக்கத்தையே அனுபவிக்கும்படி ஏற்படுகிறது. ஆகையால் இம் மூன்றும் இவனை கீழே தள்ளி விடும் என்று ஆசார்யார் சொல்கிறார். இந்த சுலோகம் பகவத் கீதையிலுள்ள,

**त्रिविधं नरकस्येदं द्वारं नाचनमात्मनः ।**
**कामः क्रोधः तथा लोभः तस्मादेतत् त्रयं त्यजेत् ॥ XVI-21**

**த்ரிவித⁴ம் நரகஸ்யேத³ம் த்³வாரம் நாசனமாத்மன꞉ ।**
**காம꞉ க்ரோத⁴꞉ ததா² லோப⁴꞉ தஸ்மாதே³தத் த்ரயம் த்யஜேத் ॥ XVI-21**

ஆத்மாவைக் கெடுக்கக்கூடியதாய் நரகத்திற்கு வழியாக காமம், குரோதம், அப்படியே லோபம், ஆகிய இந்த மூன்றும் இருந்துவருகின்றன. ஆகையால் இம் மூன்றையும் விலக்க வேண்டும் என்ற வாக்கியத்தின் வியாக்யானமேயாகும் எப்படி விலக்குவது என்பதை "ஆத்மானு ஸந்தானத்தினால்" என்ற வார்த்தையினால் குறிக்கிறார்.

இம் மூன்றில் ஏதேனும் ஒன்றில் எப்பொழுதாவது கொஞ்சம் அஜாக்கிரதை யாயிருந்தால் யாராயிருந்தாலும் கெடுத்துவிடும் என்பதை

**सर्वेषां**

**ஸர்வேஷாம்**

(எல்லோருக்கும்) என்ற பதத்தினால் காட்டுகிறார். புராணங்களிலுள்ள கதைகள் எல்லாம் இதையே ருசுப்படுத்துகின்றன. நம் அனுபவத்தை நன்கு கவனித்துப் பார்த்தாலும் இதன் உண்மை நன்கு விளங்கும்.

(19)

இவ்வளவு ஆபத்திற்குக் காரணமாயிருக்கிற காமம் முதலானதுகளை எந்த ஸாதனங்களைக்கொண்டு விலக்கமுடியும் என்று கேட்டால், ஸாமவேதத்தில் 'கல்பாஷஸாமம்' என்றும் 'ஸேதுஸாமம்' என்றும் பிரஸித்தி பெற்றிருக்கிற வாக்கியங்களையே அனுவதித்து சுலோகத்தில் அமைத்து ஆசார்யார் பதில் சொல்கிருர். அந்த ஸாமத்தில் பிரகிருதத்தில் வேண்டிய அம்சங்கள் இவை -

**सेतुंस्तर दुस्तरान् । दानेन अदानं … अक्रोधेन क्रोधं… श्रद्धयाऽश्रद्धां … सत्येनानृतं … एषा गतिः । एतदमृतम् । स्वर्गच्छ । ज्योतिर्गच्छ । सेतूस्तीत्वा चतुरः ॥**

**ஸேதும்ஸ்தர து3ஸ்தரான் । தா3னேன அதா3னம் … அக்ரோதே4ன க்ரோத4ம் … ஶ்ரத்3த4யா(அ)ஶ்ரத்3தா4ம் … ஸத்யேநாந்ருதம் … ஏஷா க3தி꞉ । ஏதத3ம்ருதம் । ஸ்2ர்க3ச்ச2 । ஜ்யோதிர்க3ச்ச2 । ஸேதூஸ்தீத்வா சதுர꞉ ॥**

'(மற்ற உபாயங்களால் கடக்கமுடியாத அணைகளைக்கடந்து செல்லு. தானம் செய்வதால் தானம் செய்யாமலிருப்பதையும், குரோதமில்லாமலிருப்பதால் குரோதத்தையும், சிரத்தையில்லாமல் இருப்பதை சிரத்தையாலும், ஸத்யத்தினுல் பொய்யையும் (தாண்டு) இதுதான் வழி. இதுதான் சாவு அற்றநிலை. இந்த நான்கு அணைகளையும் கடந்து ஸ்வர்க்கம் செல்லு. ஜ்யோதிஸ் ஸ்வரூபத்தை அடைவாயாக!'

இதிலுள்ள பதங்களின் தாத்பர்யத்தை ஸ்ரீமத் ஆசார்யார் தன் சுலோகத்தில் விவரித்துச் சொல்லுகிருர் -

**दानं ब्रह्मार्पणं यत् क्रियत इह नृभिः स्यात् क्षमाक्रोधसंज्ञा**
**श्रद्धाऽऽस्तिक्यं च सत्यं सदिति परमतः सेतुसंज्ञं चतुष्कम् ।**
**तत् स्यात् बन्धाय जन्तोरिति चतुर इमान् दानपूर्वैः चतुर्भिः**
**तीर्त्वा श्रेयोऽमृतं च श्रयत इह नरः स्वर्गतिं ज्योतिराप्तिम् ॥ १९ ॥**

**தா3னம் ப்3ரஹ்மார்பணம் யத் க்ரியத இஹ ந்ருபி4꞉ ஸ்யாத் க்ஷமாக்ரோத4ஸஞ்ஜ்ஞா**
**ஶ்ரத்3தா4(ஆ)ஸ்திக்யம் ச ஸத்யம் ஸதி3தி பரமத꞉ ஸேதுஸஞ்ஜ்ஞம் சதுஷ்கம் ।**
**தத் ஸ்யாத் ப3ந்தா4ய ஜந்தோரிதி சதுர இமான் தா3னபூர்வை꞉ சதுர்பி4꞉**
**தீர்த்வா ஶ்ரேயோ(அ)ம்ருதம் ச ஶ்ரயத இஹ நர꞉ ஸ்வர்க3திம் ஜ்யோதிராப்திம் ॥ 19 ॥**

**नृभिः** **ந்ருபி4꞉** = மனிதர்களால்,

**यत्** **யத்** = எது,

| | | |
|---|---|---|
| **ब्रह्म-अर्पणं**<br>**ப்³ரஹ்ம-அர்பணம்** | = | பிரஹ்மத்திற்கு - அர்ப்பணமாக, |
| **क्रियते**<br>**க்ரியதே** | = | செய்யப்படுகிறதோ (அதுதான்), |
| **दानं**<br>**தா³னம்** | = | “தானம்" ஆகும், |
| **क्षमा**<br>**க்ஷமா** | = | பொறுமை தான், |
| **अक्रोध-संज्ञा**<br>**அக்ரோத⁴-ஸஞ்ஜ்ஞா** | = | “அக்குரோதம்" (கோபமில்லாமை) என்ற - பெயருள்ளது, |
| **आस्तिक्यं**<br>**ஆஸ்திக்யம்** | = | ஆஸ்திக்யம் ("இருக்கிறது" என்று நம்புவது) தான், |
| **श्रद्धा**<br>**ஶ்ரத்³தா⁴** | = | "சிரத்தை” என்பது, |
| **सत्यं**<br>**ஸத்யம்** | = | ஸத்யம் என்றால், |
| **सत्**<br>**ஸத்** | = | (எப்பொழுதும் ஒரு காலத்திலும் பாதிக்கப்படாமல்) "இருக்கிற” வஸ்து, |
| **इति**<br>**இதி** | = | என்று, |
| **अतः**<br>**அத:** | = | இவைகளிலிருந்து (தானம், பொறுமை, ஆஸ்திக்யம், ஸத்யம், இவைகளிலிருந்து), |
| **परं**<br>**பரம்** | = | வேறுபட்டதான (அதானம், குரோதம், அசிரத்தை, அஸத்யம் ஆகிய), |
| **चतुऽकं**<br>**சது(அ)கம்** | = | நான்கும், |
| **सेतु-संज्ञं**<br>**ஸேது-ஸஞ்ஜ்ஞம்** | = | அணையென்று - பெயரிடப்பட்டிருக்கிறது, |
| **तत्**<br>**தத்** | = | அந்த நான்கும், |
| **जन्तोः**<br>**ஜந்தோ:** | = | பிராணியினுடைய, |
| **बन्धाय**<br>**ப³ந்தா⁴ய** | = | பந்தத்திற்காகத் தான், |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | இருக்கும், |

என்ற வாக்கியத்தையனுஸரித்து வர்ணிக்கிறுர்: -

**एकाक्यासीत् स पूर्वं मृगयति विषयान् आनुपूर्व्याऽन्तरात्मा**
**जाया मे स्यात् प्रजा वा धनमुपकरणं कर्म कुर्वन् तदर्थम् ।**
**क्लेशैः प्राणावशेषैः महदपि मनुते नान्यदस्माद्गरीय-**
**स्त्वेकाला भेऽप्यकृत्स्नो मृत इव विरमत्येकहान्याऽकृतार्थः ॥ ३१ ॥**

**ஏகாக்யாஸீத் ஸ பூர்வம் ம்ருக³யதி விஷயான் ஆனுபூர்வ்யா(அ)ந்தராத்மா**
**ஜாயா மே ஸ்யாத் ப்ரஜா வா த⁴னமுபகரணம் கர்ம குர்வன் தத³ர்த²ம் ।**
**க்லேஶைஃ ப்ராணாவஶேஷைஃ மஹத³பி மனுதே நான்யத³ஸ்மாத்³க³ரீய-**
**ஸ்த்வேகாலா பே⁴(அ)ப்யக்ருத்ஸ்னோ ம்ருத இவ**
**விரமத்யேகஹான்யா(அ)க்ருதார்த²ஃ ॥ 31 ॥**

| | | |
|---|---|---|
| **सः** ஸஃ | = | அந்த, |
| **अन्तरात्मा** அந்தராத்மா | = | உள்ளேயுள்ள ஆத்மா, |
| **पूर्वं** பூர்வம் | = | முதலில், |
| **एकाकी** ஏகாகீ | = | ஒருவராகத்தனித்து, |
| **आसीत्** ஆஸீத் | = | இருந்தார், |
| **आनुपूर्व्या** ஆனுபூர்வ்யா | = | பிறகு வரிசையாக, |
| **विषयान्** விஷயான் | = | விஷயங்களை, |
| **मृगयति** ம்ருக³யதி | = | தேடுகிறுர், |
| **मे** மே | = | எனக்கு, |
| **जाया** ஜாயா | = | மனைவி, |
| **स्यात्** ஸ்யாத் | = | இருக்க வேண்டும், |
| **प्रजा वा** ப்ரஜா வா | = | (அவள் மூலமாய்) பிரஜையும் (வேண்டும்), |

| | | |
|---|---|---|
| **उपकरणं**<br>**உபகரணம்** | = | (எல்லாரையும் போஷணம் செய்வதற்காக)<br>உபயோகிக்கும்படி, |
| **धनं**<br>**த$^{4}$னம்** | = | செல்வம் (வேண்டும்), |
| **तत्-अर्थं**<br>**தத்-அர்த$^{2}$ம்** | = | இவைகளுக்காக, |
| **प्राण-अवशेषैः**<br>**ப்ராண-அவஶேஷை:** | = | பிராணனை மாத்திரம் - மீதமாக வைத்துக்<br>கொண்டு, |
| **क्लेशैः**<br>**க்லேஶை:** | = | பலவித துன்பங்களுடன், |
| **कर्म**<br>**கர்ம** | = | வேலை, |
| **कुर्वन्**<br>**குர்வன்** | = | செய்து கொண்டு, |
| **महत्-अपि**<br>**மஹத்-அபி** | = | (வாஸ்தவத்தில்) பெரிதாயிருந்த போதிலும், |
| **अन्यत्**<br>**அன்யத்** | = | வேறு எதையும், |
| **अस्मात्**<br>**அஸ்மாத்** | = | இதைவிட, |
| **गरीयः**<br>**க$^{3}$ரீய:** | = | பெரிதாக, |
| **न मनुते**<br>**ந மனுதே** | = | எண்ணுவதில்லை, |
| **तु**<br>**து** | = | அத்துடன், |
| **एक-अलाभे-अपि**<br>**ஏக-அலாபே$^{4}$-அபி** | = | (இவைகளில் ஏதேனும்) ஒன்று - கிடைக்கா<br>விட்டாலும்கூட, |
| **अकृत्स्नः**<br>**அக்ருத்ஸ்ன:** | = | குறையுள்ளவனாக (மூளியாக) ஆகிவிடுகிறான், |
| **एक-हान्या**<br>**ஏக-ஹான்யா** | = | ஒன்று - குறைந்து விட்டால், |
| **अकृतार्थः**<br>**அக்ருதார்த$^{2}$:** | = | செய்ததெல்லாம் பிரயோஜனமற்றதாகி<br>விட்டதென்று எண்ணினவனாய், |
| **मृतः इव**<br>**ம்ருத: இவ** | = | இறந்துவிட்டவன் போல, |

**विरमति** = ஓய்ந்து போகிறுன்.

**விரமதி**

தான் பரிபூர்ணமானவன், எவ்வித குறையுமற்றவன், ஸுக ஸ்வரூபியாயிருப்பவன், என்பதையெல்லாம் மாயையினுல் ஆத்மா மறந்தவுடன், தன்னை பூர்ணமாக்கிக்கொள்ள, தனக்கு உள்ள குறையை நிவர்த்திசெய்துகொள்ள, தனக்கு ஸுகத்தை ஸம்பாதித்துக்கொள்ள, அவசியமிருப்பதாக நினைத்துவிடுகிறுன். அதன் பேரில் மனைவி, மக்கள், சொத்து, உத்தியோகம் முதலியவைகளை தேடும்படி ஏற்படுகிறது. அப்படித் தேடியடைய பலவிதத் துன்பங்களுக்குள்ளாகி வேலை செய்தும் இவைகளில் ஏதேனும் ஒன்று கிடைக்காவிட்டாலும், கிடைத்தது கையை விட்டுப் போய் விட்டாலும், தானே போய்விட்டதாக பாவித்து அயர்ந்து போகிறுன். இவைகளைவிட மேலான புருஷார்த்தங்கள் இருப்பதாக வேதமோ பெரியோர்களோ எடுத்துச் சொன்னுலும் கூட, இதிலுள்ள பிடிமானத்தினுல் அதில் நம்பிக்கை ஏற்படுவது இல்லை. மாயைக்கு இவ்வளவு பலமிருக்கிறது.

**(32)**

மாயை எவ்வளவு பெரிதாக இருந்தாலும், ஸர்வ வியாபகமாய் ஸர்வசக்தமாய் ஸர்வக்ஞமாயுள்ள ஆத்ம தத்வத்தை மறைக்கமுடியுமா? என்னுல் ஸூர்ய மண்டலத்தைவிட எவ்வளவோ சிறியதாகிய மேகம் ஸூர்யனை மறைத்து விடுகிறதில்லையா? என்கிறுர். ஆனுல் வாஸ்தவத்தில் ஸூர்யனை நம் கண்ணுக்குத் தெரியவோட்டாமல் மாத்திரம் மேகம் செய்யலாமேதவிர ஸூர்யனைப் பிரகாசமற்றதாகச் செய்ய யோக்கியதையற்றது. மேகம் இருக்கிறதென்று நமக்கு தெரிவதே ஸூர்யப் பிரகாசத்தினுல்தான் என்பதை மறந்துவிடக்கூடாது என்கிறுர்: -

**नासीत् पूर्वं न पश्चादतनुदिनकराच्छादको वारिवाहो**
**दृश्यः किं त्वन्तराऽसौ स्थगयति स दृशं पश्यतो नार्कबिम्बम् ।**
**नो चेदेवं विनाऽर्कं जलधरपटलं भासते तर्हि कस्मात्**
**तद्वत् विश्वं पिधत्ते दृशमथ न परं भासकं चालकं स्वम् ॥ ३२ ॥**

**நாஸீத் பூர்வம் ந பஶ்சாத³தனுதி³னகராச்சா²த³கோ வாரிவாஹோ**
**த்³ருஶ்ய꞉ கிம் த்வந்தரா(அ)ஸௌ ஸ்த²க³யதி ஸ த்³ருஶம் பஶ்யதோ நார்கபி³ம்ப³ம் ।**
**நோ சேதே³வம் வினா(அ)ர்கம் ஜலத⁴ரபடலம் பா⁴ஸதே தர்ஹி கஸ்மாத்**
**தத்³வத் விஶ்வம் பித⁴த்தே த்³ருஶமத² ந பரம் பா⁴ஸகம் சாலகம் ஸ்வம் ॥ 32 ॥**

**अतनु-दिनकर-आच्छादकः** = மிகவும் பெரியதான - ஸூர்யனை - பூராவும்

**அதனு-தி³னகர-ஆச்சா²த³க꞉** மறைக்கக்கூடிய,

**वारिवाहः** = மேகமானது,

**வாரிவாஹ꞉**

| | | |
|---|---|---|
| **पूर्वं** | = | முன்னுலும், |
| **பூர்வம்** | | |
| **न आसीत्** | = | இருந்ததில்லை, |
| **ந ஆஸீத்** | | |
| **पश्चात्** | = | பின்னுலும், |
| **பஶ்சாத்** | | |
| **न** | = | இருக்கப்போவதில்லை, |
| **ந** | | |
| **किं तु** | = | ஆனுல், |
| **கிம் து** | | |
| **अन्तरा** | = | மத்தியில்தான், |
| **அந்தரா** | | |
| **असौ** | = | அது, |
| **அஸௌ** | | |
| **दृश्यः** | = | பார்க்கப்படுகிறது, |
| **த்³ருஶ்ய꞉** | | |
| **सः** | = | அது, |
| **ஸ꞉** | | |
| **पश्यतः** | = | பார்க்கிறவனுடைய, |
| **பஶ்யத꞉** | | |
| **दृशं** | = | கண்ணைத்தான், |
| **த்³ருஶம்** | | |
| **स्थगयति** | = | தடுக்கிறது, |
| **ஸ்த²க³யதி** | | |
| **अर्क-बिम्बं** | = | ஸூர்யனுடைய - பிம்பத்தை, |
| **அர்க-பி³ம்ப³ம்** | | |
| **न** | = | பாதிக்கிறதில்லை, |
| **ந** | | |
| **एवं** | = | இவ்விதம் (ஸூர்யனை பாதிக்கிறதில்லையென்பது), |
| **ஏவம்** | | |
| **नो चेत्** | = | இல்லையானுல், |
| **நோ சேத்** | | |
| **तर्हि** | = | அப்பொழுது, |
| **தர்ஹி** | | |
| **जलधर-पटलं** | = | மேக - வரிசையானது, |
| **ஜலத⁴ர-படலம்** | | |

**अर्कं** = ஸூர்யனை,
**அர்கம்**

**विना** = தவிர,
**விநா**

**कस्मात्** = எதினால் (வேறு எந்தப்பிரகாசத்தினால்),
**கஸ்மாத்**

**भासते** = பிரகாசிக்கிறது (இருப்பதாகத் தெரிகிறது)?
**பா4ஸதே**

**तद्वत्** = அதைப்போலவே,
**தத்3வத்**

**विश्वं** = (மாயா கார்யமான இந்த) பிரபஞ்சம்,
**விஶ்வம்**

**दृशं** = ஜீவனுடைய பார்வையை,
**த்3ருஶம்**

**पिधत्ते** = மூடிவிடுகிறது (பார்க்க வொட்டாமல் தடுக்கிறது),
**பித4த்தே**

**अथ** = ஆனால்,
**அத2**

**भासकं** = தன்னை பிரகாசிக்கும்படிச் செய்வதாயும்,
**பா4ஸகம்**

**चालकं** = தன்னை அசையும்படிச் செய்வதாயும் உள்ள,
**சாலகம்**

**परं** = மேலான (பரம் பொருளான),
**பரம்**

**स्वं** = ஆத்மாவை,
**ஸ்வம்**

**न** = மூடிவிடுகிறதில்லை.
**ந**

ஸூர்யனுக்கு வெகுதூரம் கீழே மிகச்சிறியதாக இருக்கும் மேகம், ஸூர்ய னுடைய பிரகாசத்தை கொஞ்ச தூரத்திற்கு நன்கு தெரியவொட்டாமல் செய்யலாமே தவிர, அந்த தூரத்திற்கு வெளியிலும் மேலேயும் பிரகாசத்தை தடுக்க முடியாது. அந்த கொஞ்ச தூரத்திற்குத் தெரியாமலிருப்பதும் மேகத்தின் நிழலில் இருந்து கொண்டு பார்ப்பவனுடைய பார்வையில்தான், வேறிடங்களில் இருப்பவர்களுக்கு ஸூரிய பிரகாசம் நன்றாகத்தெரியும். இந்த மேகமும் முன்னாலுமில்லை. பின்னாலு மில்லை. நடுவில் சிறிது காலம் தோன்றி மறைந்து விடுகிறது. இந்த மேகம் எவ்விதத்திலும் ஸூர்யனை மங்கச் செய்யாது. ஸூர்யனுக்கு பிரகாசமேயில்லை யென்று செய்து விடுவது ஸாத்தியமேயில்லை. அப்படி ஸாத்தியமாயிருந்தால்

மேகம் என்று ஒன்று இருக்கிறதென்பதையே யாராலும் அறிய முடியாது. ஆகையால் ஸூர்யனை மறைக்கும் மேகமும் ஸூர்யனுல்தான் பிரகாசிக்கிறது. தவிரவும், பூமியிலும் ஸமுத்திரத்திலுமுள்ள ஜலத்தை தன் கிரணங்களால் வற்றடித்து ஆவியாக்கி மேகத்தை உண்டு பண்ணினதும் ஸூர்யன்தான். அதே மாதிரி, ஜகத் உண்டாவதும், இருப்பதாகத் தோன்றுவதும், ஸகலவித வியவஹாரங்களை நடத்துவதும், ஆத்மாவினுல் தான். தனக்குக் காரணமாயும், பிரகாசமாயும், பிரவர்த்தகமாயுமுள்ள ஆத்மாவை மறைத்துவிட ஜகத்திற்கு யோக்கியதை கிடையாது. ஆனல் ஜகத்தையே பார்த்துக்கொண்டிருப்பவனுக்கு ஆத்ம தத்வம் நன்கு விளங்காது.

**(33)**

ஜகத் இருப்பதாய்த் தோன்றுவதினுல் மாத்திரம் ஸத்யமென்று ஆகாது, அது வெறும் தோற்றமே என்பதை நன்கு விளக்குவதற்காக ஸ்வப்ன காலத்திலுள்ள அனுபவத்தை திருஷ்டாந்தமாக ஆசார்யார் எடுத்துச்சொல்கிறுர்: -

**भुञ्जानः स्वप्नराज्यं ससकलविभवो जागरं प्राप्य भूयो**
**राज्यभ्रष्टोऽहमित्थं न भजति विषमं तन्मृषा मन्यमानः ।**
**स्वप्ने कुर्वन् अगम्यागमनमुखमघं तेन न प्रत्यवायी**
**तद्वत् जाग्रद्दशायां व्यवहृतिमखिलां स्वप्नवत् विस्मरेत् चेत् ॥ ३३ ॥**

**பு⁴ஞ்ஜானः ஸ்வப்னராஜ்யம் ஸஸகலவிப⁴வோ ஜாக³ரம் ப்ராப்ய பூ⁴யோ**
**ராஜ்யப்⁴ரஷ்டோ(அ)ஹமித்த²ம் ந ப⁴ஜதி விஷமம் தன்ம்ருஷா மன்யமானः ।**
**ஸ்வப்னே குர்வன் அக³ம்யாக³மனமுக²மக⁴ம் தேன ந ப்ரத்யவாயீ**
**தத்³வத் ஜாக்³ரத்³த³ஶாயாம் வ்யவஹ்ருதிமகி²லாம் ஸ்வப்னவத் விஸ்மரேத் சேத் ॥ 33 ॥**

**स-सकल-विभव** = ஸகலவித - விபவங்களுடன் கூடியவனுக,
**ஸ-ஸகல-விப⁴வ**
**स्वप्न-राज्यं** = ஸ்வப்னத்தில் காணப்படும் - ராஜ்யத்தை,
**ஸ்வப்ன-ராஜ்யம்**
**भुञ्जानः** = அனுபவிக்கிறவன்,
**பு⁴ஞ்ஜானः**
**भूयः** = மறுபடியும்,
**பூ⁴ய:**
**जागरं** = விழிப்பை,
**ஜாக³ரம்**
**प्राप्य** = அடைந்த பிற்பாடு,
**ப்ராப்ய**

| | | |
|---|---|---|
| तत्<br>தத் | = | அந்த ராஜ்யத்தை, |
| मृषा<br>ம்ருஷா | = | பொய்யென்று, |
| मन्यमानः<br>மன்யமானஃ | = | அறிந்தவனுகி, |
| राज्य-भ्रष्टः<br>ராஜ்ய-ப்⁴ரஷ்டஃ | = | ராஜ்யத்தை - இழந்து விட்டவன், |
| अहं<br>அஹம் | = | நான், |
| इत्थं<br>இத்த²ம் | = | என்று, |
| विषमं<br>விஷமம் | = | துக்கத்தை, |
| न भजति<br>ந ப⁴ஜதி | = | அடைகிறதில்லை, |
| स्वप्ने<br>ஸ்வப்னே | = | ஸ்வப்னத்தில், |
| अगम्या-गमन-मुखं<br>அக³ம்யா-க³மன-முக²ம் | = | அகம்யா - கமனம் - முதலான, |
| अघं<br>அக⁴ம் | = | பாப கார்யத்தை, |
| कुर्वन्<br>குர்வன் | = | செய்கிறவன், |
| तेन<br>தேன | = | அந்த பாப கார்யத்தினுல், |
| प्रत्यवायी<br>ப்ரத்யவாயீ | = | தோஷமுள்ளவனுக (பிராயச்சித்தம்செய்ய வேண்டியவனுக), |
| न<br>ந | = | ஆகிறதில்லை, |
| तद्वत्<br>தத்³வத் | = | அதைப்போலவே, |
| जाग्रत्-दशायां<br>ஜாக்³ரத்-த³ஶாயாம் | = | விழிப்பு - ஸமயத்தில் உள்ள, |
| अखिलां<br>அகி²லாம் | = | எல்லா, |

**व्यवहृतिं** = வியவஹாரத்தையும்,

**வ்யவஹ்ருதிம்**

**स्वप्नवत्** = ஸ்வப்னத்தை மறப்பதுபோல,

**ஸ்வப்னவத்**

**विस्मरेत् चेत्** = மறந்து விடுவானேயாஞல் (இதுவும் பொய்தான் என்று அறிந்து விடுவானேயாஞல்) எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டான்; துக்கமோ தோஷமோ ஏற்படாது.

**விஸ்மரேத் சேத்**

ஸ்வப்ன காலத்தில் அனுபவிக்கப்படுகிற லாபமோ நஷ்டமோ இரண்டும் விழிப்பு வந்தவுடன் பொய்தான் என்ற அறிவு ஏற்பட்டு விடுவதால், அதைப்பற்றி ஸந்தோஷமோ துக்கமோ அடைவது கிடையாது. அப்படியே, அந்த ஸமயத்தில் செய்யப்படும் புண்ணியமோ பாபமோ இரண்டும் பொய்தான் என்ற அறிவு விழித்துக் கொண்டவுடன் ஏற்படுவதால், அதற்காக மேன்மையோ இழிவோ பச்சாத்தாபமோ பிராயச்சித்தமோ ஏற்படுவதற்கும் நியாயமில்லெ. அதேமாதிரி ஜாகிரத் காலத்தில் உலகத்தில் செய்யும் புண்ணிய பாபங்களும் அனுபவிக்கும் ஸுகதுக்கங்களும் பொய் தான் என்று, அவித்யையாகிற தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவருக்கு, அறிவு ஏற்பட்டு விடுமானதிஞல் அவைகளால் ஆத்மாவிற்கு எவ்வித மாறுதலும் ஏற்படக் கூடியதில்லெ. அவர் எப்பொழுதும்போல் நிர்விகாரமாய் தன் நிலெயிலேயே இருந்து வருகிறுர்.

**(34)**

ஸ்வப்ன காலத்திய அனுபவத்தைப்போல ஜாகிரத் காலத்திய அனுபவத்தைப் பார்க்க முடியுமா? முடியுமா? என்றுல், இரண்டிற்கும் உள்ள ஸமானமான அம்சத்தை எடுத்துக் காட்டுகிறுர்: -

**स्वप्नावस्थानुभूतं शुभमथ विषमं तन्मृषा जागरे स्यात्**
**जाग्रत्यां स्थूलदेह व्यवहृति विषयं तन्मृषा स्वापकाले ।**
**इत्थं मिथ्यात्वसिद्धावनिशमुभयथा सज्जते तत्र मूढः**
**सत्ये तद्वा सकेऽस्मिन्निह हि कुत इदं तन्न विद्मो वयं हि ॥ ३४ ॥**

**ஸ்வப்ஞவஸ்தா²னுபூ⁴தம் ஶுப⁴மத² விஷமம் தன்ம்ருஷா ஜாக³ரே ஸ்யாத்**
**ஜாக்³ரத்யாம் ஸ்தூ²லதே³ஹ வ்யவஹ்ருதி விஷயம் தன்ம்ருஷா ஸ்வாபகாலே ।**
**இத்த²ம் மித்⁴யாத்வஸித்³தா⁴வநிஶமுப⁴யதா² ஸஜ்ஜதே தத்ர மூட⁴:**
**ஸத்யே தத்³பா⁴ ஸகே(அ)ஸ்மின்னிஹ ஹி குத இத³ம் தன்ன வித்³மோ வயம் ஹி ॥ 34 ॥**

**स्वप्न-अवस्था-अनुभूतं** = ஸ்வப்ன - தசையில் - அனுபவிக்கப்படும்,

**ஸ்வப்ன-அவஸ்தா²-அனுபூ⁴தம்**

| | | |
|---|---|---|
| **शुभं**<br>**ஶுப4ம்** | = | நல்லது, |
| **अथ**<br>**அத2** | = | அப்படியே, |
| **विषमं**<br>**விஷமம்** | = | கெட்டது எதுவோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **जागरे**<br>**ஜாக3ரே** | = | விழிப்பு ஸமயத்தில், |
| **मृषा**<br>**ம்ருஷா** | = | பொய்யாகவே, |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | ஆகும். (அப்படியே), |
| **जाग्रत्यां**<br>**ஜாக்3ரத்யாம்** | = | விழிப்பு ஸமயத்தில், |
| **स्थूलदेह व्यवहृति विषयं**<br>**ஸ்தூ2லதே3ஹ வ்யவஹ்ருதி விஷயம்** | = | ஸ்தூல தேஹத்தின் - வியவஹாரத்திற்கு - விஷயமானதும் (நல்லதும் கெட்டதும்) எதுவோ, |
| **तत्**<br>**தத்** | = | அது, |
| **स्वापकाले**<br>**ஸ்வாபகாலே** | = | தூங்கும் - ஸமயத்தில் ஸ்வப்னம் காணும்போது), |
| **मृषा**<br>**ம்ருஷா** | = | பொய்யே, |
| **इत्थं**<br>**இத்த2ம்** | = | இவ்விதமாக, |
| **अनिशं**<br>**அநிஶம்** | = | எப்பொழுதும், |
| **उभयथा**<br>**உப4யதா2** | = | இரண்டு வகையிலும், |
| **मिथ्यात्व-सिद्धौ**<br>**மித்4யாத்வ-ஸித்3தௌ4** | = | பொய்த்தன்மையே என்று - தீர்மானமாகயிருக்கையில், |
| **तत्र**<br>**தத்ர** | = | அதில், |
| **मूढः**<br>**மூட4:** | = | மூடனுயிருந்து கொண்டு, |

| | | |
|---|---|---|
| **सज्जते**<br>**ஸஜ்ஜதே** | = | பற்றுள்ளவனுகயிருக்கிறுன், |
| **अस्मिन्**<br>**அஸ்மின்** | = | அவ்விரண்டையும் தெரியும்படி செய்து கொண்டு, |
| **सत्ये**<br>**ஸத்யே** | = | வாஸ்தவமாயிருக்கிற, |
| **अस्मिन्**<br>**அஸ்மின்** | = | இவர் (ஆத்மா), |
| **इह**<br>**இஹ** | = | இங்கே இருக்கும்போதே, |
| **इदं**<br>**இத³ம்** | = | இவ்விதம் பற்றுதல் ஏற்படுவது, |
| **कुतः**<br>**குத:** | = | எந்த காரணத்தினுல்? |
| **तत्**<br>**தத்** | = | அந்த காரணத்தை, |
| **वयं**<br>**வயம்** | = | நாம், |
| **न विद्मः**<br>**ந வித்³ம:** | = | அறியவில்லை. |

நன்கு போஜனம் செய்துவிட்டு தூங்குகிறவன் ஸ்வப்னம் காணும்போது, தான் பசியினுல் மிகவும் வருந்துவதாக அனுபவிக்கிறுன். ஸ்வப்னத்தில் நன்கு போஜனம் செய்தவன் விழித்துக்கொண்டவுடன் பசியினுல் வருந்துகிறுன். ஆகையால், ஜாகிரத் தில் இருப்பது ஸ்வப்ன காலத்தில் இல்லாததாக ஆகிவிடுகிறது; ஸ்வப்னத்தில் இருப்பது விழிப்புக் காலத்தில் இல்லாததாக ஆகிவிடுகிறது. இதிலிருந்து இரண்டுமே பொய் தான் என்று ஏற்படுகிறது. ஆனுல் ஜாகிரத் காலத்தில் அனுபவித்தவன்தான் ஸ்வப்ன காலத்திலும் அனுபவிக்கிறுனுனதால் அவன் இரண்டு காலத்திலும் இருப்ப வனுகவேயிருகிறுன்; அவன் இல்லையென்று போவதே கிடையாது. இவ்வளவு தெளிவாய் இரண்டு காலத்திலும் இருப்பதாகத் தெரிகிற ஆத்மாவை அறிந்து கொள் ளாமல், தோன்றி மறையும் அம்சங்களில் ஈடுபடுவது மூடத்தனத்தைத்தவிர வேறு என்ன? என்கிறுர் ஆசார்யார். அந்த மூடத்தனத்திற்கு என்ன காரணம் என்று ஆலோசித்தால், அந்த மூடத்தனம் காரணத்துடன் ஏற்பட்டிருந்தால் மூடத்தனமேயா காது. ஆகையால் அதற்குக் காரணம் தேடுவது வீண் பிரயத்தினம் என்று தாத்பர்யம்.

**सत्ये तद्भासके अस्मिन्**

**ஸத்யே தத்³பா⁴ஸகே அஸ்மின்**

"ஸத்யமாய் பிரகாசப்படுத்துகிறவராய் இவர் இருக்கும்போது" என்று அர்த்தம் செய்யப்பட்டது. இதையே முன்னுள்ள;

**மூढ:**

**மூட⁴:**

"மூடன்" என்ற வார்த்தையுடன் சேர்த்து அன்வயம் செய்தால் "ஸத்யமாய் பிரகாசப்படுத்துகிறவராயுள்ள இவர் விஷயத்தில் மூடனுயிருப்பவன்" என்ற அர்த்தம் கிடைக்கும். அனுத்ம பதார்த்தத்தில் பற்றுதல் ஏற்படுவதற்குக் காரணம் ஆத்மாவை அறியாமலிருப்பதுதான். ஆத்மா இவ்வளவு தெளிவாகத் தெரியும்போது, அது விஷய மாக அறியாமையோ அதன் பலனுக அனுத்மாவில் பற்றுதலுமோ ஏற்படுவதற்கு காரணமேயில்லை என்று தாத்பர்யம்.

**(35)**

ஜாக்கிரத் காலத்திலேயே ஒரு ஸமயத்தில் அனுபவித்த விஷயம் சில நாட்கள் சென்று மறந்துபோய் விடுகிறது. மறந்து விடுவதினுல் அவ்விஷயம் பொய் என்று ஆகுமா? அதைப்போலவே, ஜாக்கிரத் காலத்தில் உள்ள அனுபவம் ஸ்வப்ன ஸமயத்தில் மறந்துபோய் விடுகிறது; அதினுல் தான் ஸ்வப்னத்தில் காணவில்லை. இதற்காக அதை பொய் என்று சொல்லிவிடலாமா? என்று கேட்கலாம். இதற்காக, ஜாக்கிரத் அனுபவத்தை மறக்காமலே ஸ்வப்னம் காண்பதும் உண்டு என்பதை ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறுர். ஒருவன் ஸ்வப்னம் காணும்போது வெகு நாட்களு க்கு முன்னுல் இறந்துபோன பந்துவையோ நண்பனையோ காண்பதுண்டு; அப்பொழுது "இவன் இறந்துபோனவன் அல்லவா?" என்ற ஞாபகமும் இருப்பதுண்டு. அப்படியே இறந்துபோய் விட்டதாக ஒரு பந்துவையோ நண்பனையோ ஸ்வப்னத்தில் காணும் போது "இவன் உயிருடன் அல்லவா இருக்கிறுன்?" என்ற ஞாபகமும் இருப்பதுண்டு. ஆகையால், ஞாபக மறதியினுல் விபரீதமான தோற்றமேற்படுகிற தென்று சொல்வதற்கில்லை. காரணம் தெரியவில்லையென்று முந்தின சுலோகத்தில் சொன்னது அவ்வளவு சரியல்ல, ஞாபகமறதியைக் காரணமாகச் சொல்லலாமே என்றுல், அதுவும் போதுமான காரணமாகாது என்று காட்டுவதற்காக அடுத்த சுலோகம் ஏற்பட்டிருக்கிறது: -

**जीवन्तं जाग्रतीह स्वजनमथ मृतं स्वप्नकाले निरीक्ष्य**
**निर्वेदं यास्यकस्मात् मृतममृतममुं वीक्ष्य हर्षं प्रयाति ।**
**स्मृत्वाऽप्येतस्य जन्तोः निधनमसुयुतिं भाषते तेन साकं**
**सत्येवं भाति भूयोऽल्पकसमयवशात् सत्यता वा मृषात्वम् ॥ ३५ ॥**

**ஜீவந்தம் ஜாக்³ரதீஹ ஸ்வஜனமத² ம்ருதம் ஸ்வப்னகாலே நிரீக்ஷ்ய**
**நிர்வேத³ம் யாஸ்யகஸ்மாத் ம்ருதமம்ருதமமும் வீக்ஷ்ய ஹர்ஷம் ப்ரயாதி ।**
**ஸ்ம்ருத்வா(அ)ப்யேதஸ்ய ஜந்தோ: நித⁴னமஸுயுதிம் பா⁴ஷதே தேன ஸாகம்**
**ஸத்யேவம் பா⁴தி பூ⁴யோ(அ)ல்பகஸமயவஶாத் ஸத்யதா வா ம்ருஷாத்வம் ॥35॥**

| | | |
|---|---|---|
| इह<br>இஹ | = | இங்கே, |
| जाग्रति<br>ஜாக்³ரதி | = | ஜாகிரத்தில், |
| जीवन्तं<br>ஜீவந்தம் | = | உயிரோடிருக்கும், |
| स्व जनं<br>ஸ்வ ஜனம் | = | தன் - மனிதனை, |
| अथ<br>அத² | = | பிறகு, |
| स्वप्नकाले<br>ஸ்வப்னகாலே | = | ஸ்வப்ன காலத்தில், |
| मृतं<br>ம்ருதம் | = | இறந்து போனதாக, |
| निरीक्ष्य<br>நிரீக்ஷ்ய | = | பார்த்து, |
| अकस्मात्<br>அகஸ்மாத் | = | காரணமன்னியில், |
| निर्वेदं<br>நிர்வேத³ம் | = | துக்கத்தை, |
| याति<br>யாதி | = | அடைகிறன், |
| मृतं<br>ம்ருதம் | = | ஜாக்கிரத்தில் வாஸ்தவமாய் இறந்து போயிருக்கும், |
| अमुं<br>அமும் | = | இவனை, |
| अमृतं<br>அம்ருதம் | = | இறந்து போகாதவனுக (உயிருடன் இருப்பதாக), |
| वीक्ष्य<br>வீக்ஷ்ய | = | பார்த்து, |
| हर्षं<br>ஹர்ஷம் | = | ஸந்தோஷத்தை, |
| प्रयाति<br>ப்ரயாதி | = | அடைகிறன், |
| एतस्य<br>ஏதஸ்ய | = | இந்த, |

| | | |
|---|---|---|
| **जन्तोः** | = | மனிதனுடைய, |
| **ஜந்தோ꞉** | | |
| **निधनं** | = | மரணத்தையும், |
| **நித⁴னம்** | | |
| **असु-युतिं** | = | உயிருடன் - சேர்ந்திருப்பதையும், |
| **அஸு-யுதிம்** | | |
| **स्मृत्वा अपि** | = | ஸ்மரித்துங்கூட, |
| **ஸ்ம்ருத்வா அபி** | | |
| **तेन साकं** | = | அவனுடன் கூட, |
| **தேன ஸாகம்** | | |
| **भाषते** | = | பேசுகிறன், |
| **பா⁴ஷதே** | | |
| **एवं** | = | இவ்விதம், |
| **ஏவம்** | | |
| **सति** | = | இருக்கையில், |
| **ஸதி** | | |
| **भूयः-अल्पक-समय-वशात्-सत्यता** | = | அதிக காலம் - ஸ்வல்ப காலம் என்ற காரணத்தினுல், |
| **பூ⁴ய꞉-அல்பக-ஸமய-வஶாத்-ஸத்யதா** | | |
| **सत्यता** | = | (ஜாக்கிரத்திற்கு) உண்மையாயிருக்கும் தன்மையோ, |
| **ஸத்யதா** | | |
| **मृषात्वं वा** | = | (ஸ்வப்னத்திற்கு) பொய்யாயிருக்கும் தன்மையோ, |
| **ம்ருஷாத்வம் வா** | | |
| **भाति** | = | தோன்றுகிறது. |
| **பா⁴தி** | | |

வெகுநாள் நீடித்திருப்பதினுல் ஜாகிரத் ஸத்யமென்றும் சில நிமிஷங்களில் மறைந்து விடுவதினுல் ஸ்வப்னம் பொய் யென்றும் தோன்றுகிறதே தவிர, தத்வத்தை விசாரிக்கும்போது இரண்டிற்கும் ஒரே ஸ்வரூபந்தான். அதாவது, இரண்டுமே பொய்தான்.ஜாக்கிரத் என்பது நீடித்த தூக்கம், அவித்யையினுல் ஏற்பட்டது; ஸ்வப்னம் என்பது குறுதின தூக்கம், நித்ரையினுல் ஏற்பட்டது. இவ்வுளவுதான் வித்தியாஸம்.

**(36)**

இவ்வளவு வியக்தமாயிருக்கிற ஜகத் பொய்யான காரணத்திலிருந்து உண்டாயிருக்கமுடியுமா? என்றுல், ஒருவன் ஸ்வப்னத்தில் ஸ்திரீ ஸம்போகம் செய்ததாகக்

கண்டால், அப்பொழுது வாஸ்தவத்தில் ஸ்திரீயும் இல்லை ஸம்போகமும் இல்லை யென்று இருந்தபோதிலும், சுக்கிரம் திரவித்து வஸ்திரம் அழுக்காகிறதில்லையா? என்று பதில் கேட்கிறுர்.

**स्वाप्नस्त्रीसङ्गसौख्यादपि भृशमसतो या च रेतश्च्युतिः स्यात्**
**सा दृश्या तद्वदेतत् स्फुरति जगद सत्कारणं सत्यकल्पम् ।**
**स्वप्ने सत्यः पुमान् स्यात् युवतिरिह मृषैवानयोः संयुतिश्च**
**प्रातः शुक्रेण वस्त्रोपहतिरिति यतः कल्पना मूलमेतत् ॥ ३६ ॥**

**ஸ்வாப்னஸ்த்ரீஸங்க³ஸௌக்²யாத³பி ப்⁴ருஶமஸதோ யா ச ரேதஶ்சுதிः ஸ்யாத்**
**ஸா த்³ருஶ்யா தத்³வதே³தத் ஸ்பு²ரதி ஜக³த³ ஸத்காரணம் ஸத்யகல்பம் ।**
**ஸ்வப்னே ஸத்யः புமான் ஸ்யாத் யுவதிரிஹ ம்ருஷைவானயோः ஸம்யுதிஶ்ச**
**ப்ராதः ஶுக்ரேண வஸ்த்ரோபஹதிரிதி யதः கல்பனா மூலமேதத் ॥ 36 ॥**

**भृशं असतः** = கொஞ்சமேனும் வாஸ்தவமில்லாத,
**ப்⁴ருஶம் அஸதः**
**स्वाप्नस्त्री-सङ्ग-सौख्यात् अपि** = ஸ்வப்னத்தில் தோன்றும் - ஸ்திரீயின் சேர்க்கையினுல். ஏற்படும் - ஸுகம் காரணமாகக்கூட,
**ஸ்வாப்னஸ்த்ரீ-ஸங்க³-ஸௌக்²யாத் அபி**
**रेत-च्युतिः** = சுக்கிரம் - திரவிப்பது,
**ரேத-ச்யுதிः**
**या च** = எது,
**யா ச**
**स्यात्** = இருக்குமோ,
**ஸ்யாத்**
**सा** = அது,
**ஸா**
**दृश्या** = பார்க்கக் கூடியதாயிருக்கிறது (உண்மையாக இருக்கிறது),
**த்³ருஶ்யா**
**तद्वत्** = அதைப்போலவே,
**தத்³வத்**
**एतत्** = இந்த,
**ஏதத்**
**जगत्** = உலகம்,
**ஜக³த்**
**असत्-कारणं** = ஸத்தில்லாததை - காரணமாயுடையதாயும்,
**அஸத்-காரணம்**

| | | |
|---|---|---|
| **सत्यकल्पं** **ஸத்யகல்பம்** | = | ஸத்தியம். மாதிரி தோற்றமுள்ளதாகவும், |
| **स्फुरति** **ஸ்பு²ரதி** | = | பிரகாசிக்கிறது, |
| **यतः** **யதஃ** | = | ஏனெனில், |
| **स्वप्ने** **ஸ்வப்னே** | = | ஸ்வப்னத்தில், |
| **पुमान्** **புமான்** | = | புருஷன், |
| **सत्यः** **ஸத்யஃ** | = | ஸத்யமாக, |
| **स्यात्** **ஸ்யாத்** | = | இருக்கலாம், |
| **इह** **இஹ** | = | இங்கே, |
| **युवति** **யுவதி** | = | ஸ்திரீ, |
| **मृषा एव** **ம்ருஷா ஏவ** | = | பொய்தான்; |
| **अनयोः** **அனயோஃ** | = | இவ்விருவருக்கும், |
| **संयुतिः च** **ஸம்யுதிஃ ச** | = | சேர்க்கையும் (பொய்தான்). (ஆனாலும்), |
| **प्रातः** **ப்ராதஃ** | = | காலையில் |
| **युकेणः** **யுகேணஃ** | = | சுக்கிரத்தினால், |
| **वस्त्र-उपहतिः** **வஸ்த்ர-உபஹதிஃ** | = | வஸ்திரம் - கெடுக்கப்பட்டிருப்பது (பார்க்கப்படு கிறது), |
| **इति** **இதி** | = | என்ற, |
| **एतत्** **ஏதத்** | = | இது, |
| **कल्पना-मूलं** **கல்பனா-மூலம்** | = | வாஸ்தவமில்லாத கல்பனையையே காரணமாகவுடையது. |

ஸ்வப்ன லோகத்தை அனுபவித்து பின்னுல் விழித்துக் கொண்ட பிறகு அப்போகத்தின் ஞாபகத்தோடிருக்கும் புருஷன் எப்படி ஸத்யமோ, அப்படியே, உலகத்தில் அனுபவித்துவந்து பின்னுல் ஆத்ம ஞானத்தினுல் உலகம் ஸத்யமில்லை யென்று எவன் உணர்கிறுனே அந்த அறிவுள்ளவன் ஸத்யம். அவனே ஆத்மா.

**(37)**

ஆத்மா எப்பொழுதும் தென்பட்டுக்கொண்டேதான் இருக்கிறது. ஆனுலும் அதை யாரும் உணர்வதில்லை. ஒரு அட்டையில் வரையப்பட்டிருக்கும் சித்திரத்தைப் பார்ப்பவன் அவ்வட்டையை பார்க்காமலிருக்கமுடியாது. ஆனுலும் அந்த சித்திரமே அவனுடைய கவனத்தை இழுந்து விடுகிறபடியால், அட்டையை பார்க்கிறேன் என்ற உணர்ச்சியே ஏற்படுவதில்லை, அதேமாதிரி ஜாகிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி ஆகிய மூன்று தசைகளிலும் ஆத்மா தோன்றிக்கொண்டேயிருந்தபோதிலும் அந்த தசைகளை அனுபவிப்பதில் ஈடுபட்டுக்கொண்டு அவைகளுக்கு அடிப்படையாயிருக் கும் ஆத்மாவைப் பார்ப்பதில்லை. இது ஒரு பெரிய ஆச்சர்யம் என்கிறுர்.

**पश्यन्त्याराममस्य प्रतिदिवसममी जन्तवः स्वापकाले**
**पश्यत्येनं न कश्चित् करणगणमृते मायया क्रीडमानम् ।**
**जाग्रत्यर्थव्रजानां अथ च तनुभृतां भासकं चालकं वा**
**नो जानीते सुषुप्तौ परमसुखमयं कश्चिदाश्चर्यमेतत् ॥ ३७ ॥**

**பஶ்யந்த்யாராமமஸ்ய ப்ரதிதி[3]வஸமமீ ஜந்தவ꞉ ஸ்வாபகாலே**
**பஶ்யத்யேனம் ந கஶ்சித் கரணக[3]ணம்ருதே மாயயா க்ரீட[3]மானம் ।**
**ஜாக்[3]ரத்யர்த[2]வ்ரஜானாம் அத[2] ச தனுப்[4]ருதாம் பா[4]ஸகம் சாலகம் வா**
**நோ ஜானீதே ஸுஷுப்தௌ பரமஸுக[2]மயம் கஶ்சிதா[3]ஶ்சர்யமேதத் ॥ 37 ॥**

| | | |
|---|---|---|
| **प्रतिदिवसं** **ப்ரதிதி[3]வஸம்** | = | பிரதிதினமும், |
| **अमी** **அமீ** | = | இந்த, |
| **जन्तवः** **ஜந்தவ꞉** | = | ஜந்துக்கள், |
| **स्वापकाले** **ஸ்வாபகாலே** | = | ஸ்வப்னகாலத்தில், |
| **अस्य** **அஸ்ய** | = | இந்த ஆத்மாவினுடைய, |
| **आरामं** **ஆராமம்** | = | விளையாட்டை (ஆத்மாவினுல் உண்டுபண்ணப் பட்ட வாஸனுரூபமான பொருள்களை), |

| | | |
|---|---|---|
| **पश्यन्ति** / **பஶ்யந்தி** | = | பார்த்துக்கொண்டேயிருக்கிறுர்கள். (ஆனுல்), |
| **कश्चित्** / **கஶ்சித்** | = | யாரும், |
| **करण-गणं-ऋते** / **கரண-க$^{3}$ணம்-ருதே** | = | இந்திரிய - கூட்டம். இல்லாமலே, |
| **मायया** / **மாயயா** | = | மாயையினுல், |
| **क्रीडमानं** / **க்ரீட$^{3}$மானம்** | = | விஜளயாடிக் கொண்டிருக்கிற, |
| **एनं** / **ஏனம்** | = | இவரை, |
| **न पश्यति** / **ந பஶ்யதி** | = | பார்ப்பதில்ஜல, |
| **जाग्रति** / **ஜாக்$^{3}$ரதி** | = | விழிப்புக்காலத்தில், |
| **अर्थ-व्रजानां** / **அர்த$^{2}$-வ்ரஜாஞும்** | = | விஷயங்களின் - கூட்டங்கஜள, |
| **भासकं** / **பா$^{4}$ஸகம்** | = | பிரகாசிக்கச்செய்பவராயும், |
| **अथ च** / **அத$^{2}$ ச** | = | அப்படியே, |
| **तनुभृतां** / **தனுப்$^{4}$ருதாம்** | = | சரீரம் தரித்திருக்கும் ஜீவர்கஜள, |
| **चालकं वा** / **சாலகம் வா** | = | சேஷ்டிக்கும்படிச் செய்பவராயும் உள்ளவரையும் (பார்ப்பதில்ஜல), |
| **सुषुप्तौ** / **ஸுஷுப்தௌ** | = | நல்ல தூக்கத்தில், |
| **परम-सुखमयं** / **பரம-ஸுக$^{2}$மயம்** | = | மேலான - ஸுகஸ்வரூபமாயிருப்பவரையும், |
| **कश्चित्** / **கஶ்சித்** | = | எவரும், |
| **नो जानीते** / **நோ ஜானீதே** | = | அறிகிறதில்ஜல, |
| **एतत्** / **ஏதத்** | = | இது, |

**आश्चर्य** = வியக்கத்தக்கது.
**ஆஶ்சர்யம்**

ஜாக்கிரத் காலத்தில் ஜீவர்களை சேஷ்டிக்கச் செய்வதும் பதார்த்தங்களை தெரியச்செய்வதும் ஆத்மா; ஸ்வப்னத்தில் எவ்வித இந்திரியங்களையும் எதிர்பாராமல் அனுபவம் ஏற்படும்படிச் செய்வதும் ஆத்மா; ஸுஷுப்தியில் எவ்வித துக்கமும் கலக்காமல் ஸுக அனுபவத்தைக் கொடுப்பதும் ஆத்மா, அப்படியிருந்தும் அந்த ஆத்மாவை அறிந்து கொள்ளாமல் இந்த மூன்று தசைகளை மாத்திரம் ஜீவர்கள் அனுபவித்து வருவது மிகவும் ஆச்சர்யமே என்கிறுர். பிருஹதாரண்யக உபநிஷத்தில் இதற்கு பிரமாண வாக்யம்.

**आराममस्य पश्यन्ति न तं पश्यति कश्चन ... ॥**
**ஆராமமஸ்ய பஶ்யந்தி ந தம் பஶ்யதி கஶ்சன … ॥** IV 3 (14)

**(38)**

ஸ்வப்னம் போலவே ஜாக்கிரத்தும் பொய்தான் என்றால் வேதம், சாஸ்திரம், குரு, வேதாந்த விசாரம் முதலிய யாவற்றும் பொய்யாகி விடுமே? அதனால் ஸத்யமான ஆத்மாவின் அறிவு எப்படி ஏற்படமுடியும்? என்றால் அதற்கு இரண்டு விதமாக ஆசார்யார் பதில் சொல்கிறுர். (1) அஸத்யமான ஸாதனத்தினால் ஸ்த்யமான பலன் ஏற்படலாம். (2) ஆத்மா "ஏற்பட வேண்டிய" பலன் இல்லை, ஸ்வதஸ்ஸித்தர் எப்பொழுதும் ஸ்வயம் பிரகாசமாயிருப்பவர். அவரை நன்கு தெரியவொட்டாமல் செய்துகொண்டிருக்கிற அவித்யை என்ற மறைவை விலக்க வேண்டியதைத்தவிர வேறு எவ்வித ஸாதனமும் தேவையில்லை. இதற்குத்தான் வேதம் முதலியவை உபயோகப்படுகின்றன. இவ்விரண்டு அம்சங்களையும் அடுத்த சுலோகத்தில் தெளிவுபடுத்துகிறுர்.

**स्वप्ने मन्त्रोपदेशः श्रवणपरिचितः सत्य एव प्रबोधे**
**स्वप्नादेव प्रसादात् अभिलषितफलं सत्यतां प्रातरेति ।**
**सत्यप्राप्तिस्त्वमत्यादपि भवति तथा किं च तत् स्वप्रकाशं**
**येनेदं भाति सर्वं चरमचरमथोच्चावचं दृश्यजातम् ॥ ३८ ॥**

**ஸ்வப்னே மந்த்ரோபதே³ஶ: ஶ்ரவணபரிசித: ஸத்ய ஏவ ப்ரபோ³தே⁴**
**ஸ்வப்நாதே³வ ப்ரஸாதா³த் அபி⁴லஷிதப²லம் ஸத்யதாம் ப்ராதரேதி ।**
**ஸத்யப்ராப்திஸ்த்வமத்யாத³பி ப⁴வதி ததா² கிம் ச தத் ஸ்வப்ரகாஶம்**
**யேனேத³ம் பா⁴தி ஸர்வம் சரமசரமதோ²ச்சாவசம் த்³ருஶ்யஜாதம் ॥ 38 ॥**

**स्वप्ने** = ஸ்வப்னத்தில்,
**ஸ்வப்னே**

| | | |
|---|---|---|
| **श्रवण-परिचित:** | = | கேட்டு அறிந்து கொள்ளப்பட்ட, |
| **ஶ்ரவண-பரிசித:** | | |
| **मन्त्र-उपदेश:** | = | மந்திரத்தின் - உபதேசமானது, |
| **மந்த்ர-உபதே³ஶ:** | | |
| **प्रबोधे** | = | விழித்துக்கொண்ட பிறகு, |
| **ப்ரபோ³தே⁴** | | |
| **सत्य एव** | = | ஸத்யமாகவே இருக்கிறது, |
| **ஸத்ய ஏவ** | | |
| **तथा** | = | அப்படியே, |
| **ததா²** | | |
| **स्वप्नात् एव** | = | ஸ்வப்னத்தில்கூடக்கிடைத்த, |
| **ஸ்வப்ஞத் ஏவ** | | |
| **प्रसादात्** | = | அனுக்ரஹத்திஞல், |
| **ப்ரஸாதா³த்** | | |
| **अभिलषित-फलं** | = | வேண்டப்பட்ட - பலன், |
| **அபி⁴லஷித-ப²லம்** | | |
| **प्रात:** | = | காஜலயில், |
| **ப்ராத:** | | |
| **सत्यतां** | = | உண்மையாயிருக்கும் தன்மையையே, |
| **ஸத்யதாம்** | | |
| **एति** | = | அடைகிறது. (ஆகையால்), |
| **ஏதி** | | |
| **असत्यात् अपि तु** | = | வாஸ்தவமில்லாததிலிருந்துங்கூட, |
| **அஸத்யாத் அபி து** | | |
| **सत्य-प्राप्ति:** | = | வாஸ்தவமாயுள்ளதின் - அடைதல், |
| **ஸத்ய-ப்ராப்தி:** | | |
| **भवति** | = | ஏற்படும், |
| **ப⁴வதி** | | |
| **किं च** | = | மேலும், |
| **கிம் ச** | | |
| **चरं** | = | அசைவுள்ளது, |
| **சரம்** | | |
| **अचरं** | = | அசைவற்றது, |
| **அசரம்** | | |
| **अथ** | = | அப்படியே, |
| **அத²** | | |

| | | |
|---|---|---|
| **उच्च-अवचं** | = | மேல் - கீழ் உள்ளது ஆகிய, |
| **உச்ச-அவசம்** | | |
| **सर्वं** | = | எல்லா, |
| **ஸர்வம்** | | |
| **इदं** | = | இந்த, |
| **இத³ம்** | | |
| **दृश्य-जातं** | = | பார்க்கப்படும் - கூட்டமும் (உலகம் பூராவும்), |
| **த்³ருஶ்ய-ஜாதம்** | | |
| **येन** | = | எவரால், |
| **யேன** | | |
| **भाति** | = | பிரகாசிக்கிறதோ, |
| **பா⁴தி** | | |
| **तत्** | = | அது (ஆத்மா), |
| **தத்** | | |
| **स्व-प्रकाशं** | = | (வேறு எதையும் எதிர்பாராமல்) தானே |
| **ஸ்வ-ப்ரகாஶம்** | | பிரகாசிக்கும் வஸ்து. |

36 - வது சுலோகத்தில் கண்ட ஸ்வப்ன ஸ்திரீ ஸங்க திருஷ்டாந்தத்தை இங்கேயும் எடுத்துக்கொள்ளலாமாலுைம் அங்கு ஏற்படும் ஸுகம் வெறும் பிராந்தி, க்ஷணிகமும்கூட, என்ற காரணத்திஞல் இங்கே வேறு திருஷ்டாந்தம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

**(39)**

ஸ்வப்ன காலத்தில் தோன்றும் இந்திரியங்கள் விஷயங்கள் எல்லாம் ஜாக்கிரத் காலத்தில் தோன்ருததிஞல் பொய்யென்று எப்படி சொல்லப்பட்டதோ அப்படியே, ஜாக்கிரத் காலத்தில் தோன்றும் இந்திரியங்கள் விஷயங்கள் எல்லாம் ஸுஷுப்தி காலத்தில் தோன்ருததினால் பொய்யேயாகும். வெறும் தோற்றம்தான் என்பதை மேலுள்ள சுலோகத்தில் காட்டுகிருர்.

**मध्यप्राणं सुषुप्तौ स्वजनिमनुविशन्त्यग्निसूर्यादयोऽमी**
**वागाद्याः प्राणवायुं तदिह निगदिता ग्लानिरेषां न वायोः ।**
**तेभ्यो दृश्यावभासो भ्रम इति विदितः शुक्तिकारौप्य कल्पः**
**प्राणायामव्रतं तत् श्रुतिशिरसि मतं स्वात्मलब्धौ न चान्यत् ॥ ३९ ॥**

**மத்⁴யப்ராணம் ஸுஷுப்தௌ ஸ்வஜனிமனுவிஶந்த்யக்³நிஸூர்யாத³யோ(அ)மீ**
**வாகா³த்³யா: ப்ராணவாயும் ததி³ஹ நிக³தி³தா க்³லாநிரேஷாம் ந வாயோ: ।**
**தேப்⁴யோ த்³ருஶ்யாவபா⁴ஸோ ப்⁴ரம இதி விதி³த: ஶுக்திகாரௌப்ய கல்ப:**
**ப்ராணாயாமவ்ரதம் தத் ஶ்ருதிஶிரஸி மதம் ஸ்வாத்மலப்³தௌ⁴ ந சான்யத் ॥39॥**

| | | |
|---|---|---|
| **सुषुप्तौ**<br>**ஸுஷுப்தௌ** | = | நல்லதூக்க ஸமயத்தில், |
| **अमी**<br>**அமீ** | = | இந்த, |
| **अग्नि-सूर्या-आदयः**<br>**அக்³னி-ஸூர்யா-ஆத³ய:** | = | (வாக் இந்திரியத்தின் அதிதேவதையான) அக்னி-(சக்ஷுஸ் இந்திரியத்தின் அதிதேவதையான) ஸூர்யன் முதலானவர்கள் (மற்ற இந்திரியங்களின் அதிதேவதைகள்) எல்லாரும், |
| **स्व-जनि**<br>**ஸ்வ-ஜனி** | = | தங்களுடைய - உத்பத்தி ஸ்தானமான, |
| **मध्यप्राणं**<br>**மத்⁴யப்ராணம்** | = | மத்தியிலுள்ள பிராணதேவதையை (விராட்டை), |
| **अनुविशन्ति**<br>**அனுவிஶந்தி** | = | அடைந்துவிடுகிறுர்கள் (அப்படியே), |
| **वागाद्याः**<br>**வாகா³த்³யா:** | = | வாக் முதலான இந்திரியங்கள், |
| **प्राणवायुं**<br>**ப்ராணவாயும்** | = | (சரீரத்தில் தங்களுடைய உத்பத்திஸ்தானமாகிய) பிராணவாயுவை (அடைந்து விடுகின்றன), |
| **तत्**<br>**தத்** | = | அதனுல்தான், |
| **इह**<br>**இஹ** | = | இங்கே, |
| **एषां**<br>**ஏஷாம்** | = | (இந்திரியங்களும் அவைகளின் அதிதேவதைகளுமாகிய) இவர்களுக்கு, |
| **ग्लानिः**<br>**க்³லாநி** | = | வாட்டம் (லயம்), |
| **निगदिता**<br>**நிக³தி³தா** | = | (வேதத்தில்) சொல்லப் பட்டிருக்கிறது, |
| **वायोः**<br>**வாயோ:** | = | வாயுவிற்கு, |
| **न**<br>**ந** | = | சொல்லப்படவில்லை, |
| **तेभ्यः**<br>**தேப்⁴ய:** | = | அந்த இந்திரியங்களிலிருந்து ஏற்படும், |
| **दृश्य-अवभासः**<br>**த்³ருஶ்ய-அவபா⁴ஸ:** | = | அனுபவிக்கப்படுகிற பதார்த்தங்களின் - தோற்றம், |

| | | |
|---|---|---|
| **शुक्तिकारौप्य कल्पः** ஶுக்திகாரௌப்ய கல்ப꞉ | = | சிப்பியில் தோன்றும் - வெள்ளிக்கு - ஸமானமாக, |
| **भ्रम** ப்⁴ரம | = | பிராந்தி, |
| **इति विदितः** இதி விதி³த꞉ | = | நிச்சயிக்கப்படுகிறது, |
| **तत्** தத் | = | ஆகையால்தான் (இந்திரியங்களுக்கு வெளிக் கிளம்புதல் - லயம் உண்டு, பிராணனுக்குக் கிடையாது, என்ற காரணத்தினுல்தான்), |
| **स्व-आत्म-लब्धौ** ஸ்வ-ஆத்ம-லப்³தௌ⁴ | = | தன்னுடைய - ஆத்ம தத்வத்தை - அறிகிற விஷயத்தில், |
| **प्राणायाम व्रतं** ப்ராணுயாம வ்ரதம் | = | பிராணனே நியமனம் செய்வதென்ற விருதம் (ஸாதனமாக), |
| **श्रुतिशिरसि** ஶ்ருதிஶிரஸி | = | உபநிஷத்தில், |
| **मतं** மதம் | = | கருதப்பட்டிருக்கிறது, |
| **अन्यत्** அன்யத் | = | வேறு விரதம், |
| **न च** ந ச | = | அங்கீகரிக்கப்படவில்லே. |

வெளிப்பிரபஞ்சம் யாவற்றையும் இந்திரியங்களுக்குள் லயம் செய்து, இந்திரியங்கள் எல்லாவற்றையும் பிராணனில் லயம் செய்து, பிறகு பிராணனேயும் கட்டுப்படுத்தி விட்டால், எவ்வித விக்ஷேபத்திற்கும் அவகாசமிராததினுல் ஸ்வயம் பிரகாசமாயிருக்கிற ஆத்ம தத்வம் நிர்மலமாய் விளங்கும்.

**(40)**

பிரபஞ்சத்திலிருந்து இந்திரியங்களேத்திருப்பி, அவைகளுக்கு வேலேயில்லா மல் செய்யவேண்டுமானுல், அவைகளே பிரபஞ்சத்தை நோக்கி இழுக்கக்கூடிய மனஸிலுள்ள துவேஷங்களே விலக்கியாக வேண்டும். ஆகவே ஆத்மஞானம் ஏற்படுவதற்குள்ள படிகளில் முதலாவது படி ராகத்துவேஷமற்று இருத்தல். இதையே "வைராக்யம்” என்பார்கள், அது எவ்வளவு அவசியம் என்பதை திருஷ்டாந்தம் மூலமாக அடுத்த சுலோகத்தில் சொல்கிருர்.

**नोऽकस्मादामेधः स्पृशति च दहनः किं तु शुष्कं निदाघात्**
**आर्द्रं चेतोऽनुबन्धैः कृतसुकृतमपि स्वोत्कर्मप्रजार्थैः ।**
**तद्वत् ज्ञानाग्निरेतत् स्पृशति न सहसा किं तु वैराग्यशुष्कं**
**तस्मात् शुद्धो विरागः प्रथममभिहितः तेन विज्ञान सिद्धिः ॥ ४० ॥**

**நோ(அ)கஸ்மாதா³மேத⁴꞉ ஸ்ப்ருஶதி ச த³ஹன꞉ கிம் து ஶுஷ்கம் நிதா³கா⁴த்**
**ஆர்த்³ரம் சேதோ(அ)னுப³ந்தை⁴꞉ க்ருதஸுக்ருதமபி ஸ்வோத்கர்மப்ரஜார்தை²꞉ ।**
**தத்³வத் ஜ்ஞாநாக்³நிரேதத் ஸ்ப்ருஶதி ந ஸஹஸா கிம் து வைராக்³யஶுஷ்கம்**
**தஸ்மாத் ஶுத்³தோ⁴ விராக³꞉ ப்ரத²மமபி⁴ஹித꞉ தேன விஜ்ஞான ஸித்³தி⁴꞉ ॥ 40 ॥**

**आर्द्रं** = ஈரமாயிருக்கும்,
**ஆர்த்³ரம்**

**एधः** = விறகை,
**ஏத⁴꞉**

**दहनः** = நெருப்பு,
**த³ஹன꞉**

**अकस्मात्** = உடனே,
**அகஸ்மாத்**

**नो स्पृशति च** = பற்றிக்கொள்ளாது,
**நோ ஸ்ப்ருஶதி ச**

**किं तु** = ஆனால்,
**கிம் து**

**निदाघात्** = வெய்யிலினால்,
**நிதா³கா⁴த்**

**शुष्कं** = உலர்ந்திருப்பதை (பற்றிக்கொள்ளும்),
**ஶுஷ்கம்**

**तद्वत्** = அதைப்போல,
**தத்³வத்**

**कृत-सुकृतं-अपि** = புண்ணியம் செய்திருந்தபோதிலும்,
**க்ருத-ஸுக்ருதம்-அபி**

**स्व-उत्क-कर्म-प्रजा-अर्थैः** = தனக்கு - விதிக்கப்பட்ட - கர்மாக்கள் - பிரஜை சொத்து ஆகிய,
**ஸ்வ-உத்க-கர்ம-ப்ரஜா-அர்தை²꞉**

**अनुबन्धैः** = கூடச் சேர்ந்தவைகளால்,
**அனுப³ந்தை⁴꞉**

**आर्द्रं** = நனைந்திருக்கிற,
**ஆர்த்³ரம்**

| | | |
|---|---|---|
| **एतत्**<br>**ஏதத்** | = | இந்த, |
| **चेतः**<br>**சேதஃ** | = | மனதை, |
| **ज्ञान अग्निः**<br>**ஞான அக்³னிஃ** | = | ஞானமாகிற நெருப்பு, |
| **सहसा**<br>**ஸஹஸா** | = | உடனே, |
| **न स्पृशति**<br>**ந ஸ்ப்ருஶதி** | = | பற்றிக்கொள்ளாது, |
| **किं तु**<br>**கிம் து** | = | ஆனால், |
| **वैराग्य-शुष्कं**<br>**வைராக்³ய-ஶுஷ்கம்** | = | வைராக்கியத்தினால் - உலர்ந்திருப்பதை (பற்றிக்கொள்ளும்), |
| **तस्मात्**<br>**தஸ்மாத்** | = | ஆகையினால்தான், |
| **शुद्धः**<br>**ஶுத்³த⁴ஃ** | = | சுத்தமான, |
| **विरागः**<br>**விராக³ஃ** | = | வைராக்கியமானது, |
| **प्रथमं**<br>**ப்ரத²மம்** | = | முதலாவதாக, |
| **अभिहितः**<br>**அபி⁴ஹிதஃ** | = | சொல்லப்பட்டிருக்கிறது, |
| **तेनः**<br>**தேன:** | = | அதனால் தான், |
| **विज्ञान सिद्धिः**<br>**விஜ்ஞான ஸித்³தி⁴:** | = | அனுபவஞானத்தின் - ஸித்தி (ஏற்படும்). |

விறகை எரியவிடாமல் செய்வது அதிலுள்ள ஈரம்தான் அப்படியே மனஸ் ஆத்மாவைத்தவிர வேறு விஷயங்களில் பற்றியிருந்தால் அதில் ஞானம் ஏற்படுவது ஸாத்தியமில்லை. சாஸ்திரவிஹிதமான கர்மாக்களிலோ, தான், பிதா, பர்த்தா, முதலான முறைகளில் ஏற்பட்டிருக்கும் கடமைகளிலோ, புத்திரமித்திராதிகளிலோ, வீடு பணம் கியாதி முதலானவைகளிலோ, பற்றுதல் இருந்துவிட்டால் சரியானபடி ஞானமேற்படவிடாது. ஆகையால் அனாத்ம விஷயமான பற்றுதலை விலக்கியே ஆக வேண்டும். அவ்விதம் விலக்குவதுதான் “வைராக்கியம்” எனப்படும்.

**स्वोक्तकर्मप्रजार्थः कुतसुकृतं अपि**

**ஸ்வோக்தகர்மப்ரஜார்த2: குதஸுக்ருதம் அபி**

“சாஸ்திரத்தில் தனக்குச்சொல்லப்பட்ட கர்மாக்கள், (சாஸ்திரத்திலேயே அவசியம் புத்திரன் வேண்டுமென்று சொன்னதை அனுஸரித்து) ஸந்தானம், இவைகளை பிரயோஜனமாயுடையவைகளால் புண்ணியம் ஸம்பாதிக்கப்பட்டிருந்த போதிலும்" என்றும் அன்வயம் செய்யலாம்.

**(41)**

அனுத்ம விஷயமான ஸகல ஆசையையும் விட்டு வெறும் தோற்றமாயிருக்கும் ஜகத்தின் அடிப்படையான ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரத்தினுல், அந்த ஜகத்து வாஸ்தவமாய் இருக்கும் பதார்த்தமில்லையென்று உணரவேண்டுமென்கிற விஷயத்தில் ஈசாவாஸ்ய உபநிஷத்திலுள்ள

**ईशावास्यमिदं सर्वं यत्किंच जगत्यां जगत् ।**
**तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्यस्विद्धनम् ॥**

**ஈஶாவாஸ்யமித3ம் ஸர்வம் யத்கிஞ்ச ஜக3த்யாம் ஜக3த் ।**
**தேன த்யக்தேன பு4ஞ்ஜீதா2 மா க்3ருத4: கஸ்யஸ்வித்3த4னம் ॥**

என்ற மந்திரத்தின் அர்த்தத்தை சுலோக ரூபமாய் சொல்கிறுர்.

**यत्किंचित् नामरूपात्मकमिदमसदेवोदितं भाति भूमौ**
**येनानेकप्रकारैः व्यवहरति जगत् येन तेनेश्वरेण ।**
**तद्वत् प्रच्छादनीयं निभृतरशनया यद्वदेष द्विजिह्व**
**तेन त्यक्तेन भोज्यं सुखमनतिशयं मा गृधोऽन्यद्धनाद्यम् ॥ ४१ ॥**

**யத்கிஞ்சித் நாமரூபாத்மகமித3மஸதே3வோதி3தம் பா4தி பூ4மௌ**
**யேனுனேகப்ரகாரை: வ்யவஹரதி ஜக3த் யேன தேனேஶ்வரேண ।**
**தத்3வத் ப்ரச்சா2த3னீயம் நிப்4ருதரஶனயா யத்3வதே3ஷ த்3விஜிஹ்வ**
**தேன த்யக்தேன போ4ஜ்யம் ஸுக2மனதிஶயம் மா**
**க்3ருதோ4(அ)ன்யத்3த4நாத்3யம் ॥ 41 ॥**

**भूमौ** = உலகத்தில்,
**பூ4மௌ**

**नाम-रूप-आत्मकं** = பெயரையும் - ரூபத்தையுமே - ஸ்வபாவமாயுள்ள,
**நாம-ரூப-ஆத்மகம்**

**इदं** = இது,
**இத3ம்**

| | | |
|---|---|---|
| **यत् किंचित्** | = | எதுவும் (யாவும்), |
| **யத் கிஞ்சித்** | | |
| **असत् एव** | = | வாஸ்தவமில்லாததாகவே, |
| **அஸத் ஏவ** | | |
| **उदितं** | = | உண்டாகி, |
| **உதி³தம்** | | |
| **येन** | = | எவரால், |
| **யேன** | | |
| **भाति** | = | பிரகாசிக்கிறதோ, |
| **பா⁴தி** | | |
| **येन** | = | எவராலேயே, |
| **யேன** | | |
| **जगत्** | = | இந்த ஜகத்தானது, |
| **ஜக³த்** | | |
| **अनेक प्रकारैः** | = | பல - விதமாக, |
| **அனேக ப்ரகாரைঃ** | | |
| **व्यवहरति** | = | வியவஹாரம் செய்கிறதோ, |
| **வ்யவஹரதி** | | |
| **तेन** | = | அந்த, |
| **தேன** | | |
| **ईश्वरेण** | = | ஈசுவரனைக்கொண்டு, |
| **ஈஶ்வரேண** | | |
| **यद्वत्** | = | எவ்விதம், |
| **யத்³வத்** | | |
| **एष** | = | இந்த (முன்தோன்றுகிற), |
| **ஏஷ** | | |
| **द्विजिह्वः** | = | பாம்பானது, |
| **த்³விஜிஹ்வ** | | |
| **निभृतरशनया** | = | தீர்மானிக்கப்பட்ட - கயிற்றினுல் (மறைக்கப்பட்டு |
| **நிப்⁴ருதரஶனயா** | | "இல்லை" என்று செய்யப்பட்டு விடுகிறதோ), |
| **तद्वत्** | = | அவ்விதமே, (இந்த ஜகத்), |
| **தத்³வத்** | | |
| **प्रच्छादनीयं** | = | நன்கு மூடப்பட வேண்டும் ("வாஸ்தவமில்லை" |
| **ப்ரச்சா²த³னீயம்** | | என்று உணரப்பட வேண்டும்), |
| **तेन** | = | அவ்விதம், |
| **தேன** | | |

| | | |
|---|---|---|
| **त्यक्तेन** **த்யக்தேன** | = | (ஜகத்தை "துச்சம" வாஸ்தவமில்லையென்று) விட்டு விடுவதின் மூலமாக, |
| **अनतिशयं** **அனதிஶயம்** | = | எதற்கு மேல் கிடையாதோ அவ்வித, |
| **सुखं** **ஸுக²ம்** | = | ஸுகம் (மோக்ஷானந்தம்), |
| **भोज्यं** **போ⁴ஜ்யம்** | = | அனுபவிக்கத்தக்கது. (ஆகையால்), |
| **अन्यत्** **அன்யத்** | = | இதைத்தவிர வேறுகிய, |
| **धन-आद्यं** **த⁴ன-ஆத்³யம்** | = | செல்வம் - முதலியதை, |
| **मा गृधः** **மா க்³ருத⁴:** | = | விரும்பாதே. |

எதற்கு மேல் ஆனந்தம் கிடையாதோ அந்த உத்தமமான ஆனந்தம் கிடைக்க வேண்டுமாளுல், அதற்குக் கீழ்பட்ட எல்லாவித ஆனந்தத்திலும் "வேண்டும்" என்ற பற்றுதல் இருக்கக்கூடாது. மற்ற ஆனந்தங்களில் "வேண்டும்" என்ற எண்ணம் ஏற்படு வதற்குக் காரணம் "அது நன்ருக இருக்கிறது" என்ற எண்ணமே. அவ்வித எண்ணம் ஏற்படுவதற்குக்காரணம் அது பார்வைக்கு நன்ருயிருப்பதாகத் தோன்றுவதே. அவ்விதம் தோன்றும்போது "அது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமான பதார்த்தமேயில்லை; அது நன்ருகத்தோன்றுவதும் அதன் இயல்பு இல்லை; வேறு வாஸ்தவமாய் நன்ருயிருக்கும் பதார்த்தத்தின் தோற்றத்தை இரவல் வாங்கிக் கொண்டு இது தோன்றுகிறதே தவிர வேறில்லை" என்ற அறிவு ஏற்பட்டு விட்டால் அந்த வாஸ்தவமான பதார்த்தத்திலே தான் ஈடுபடத்தோன்றும், அம்முறையில், ஜகத் தோன்றுவதற்கு அடிப்படையாய் ஆத்ம தத்வம் இருக்கிறது, தோன்றும் பாம்பு க்கு அடிப்படையாய் கயிறு இருப்பதுபோல. அந்த அடிப்படை இருப்பதிளுல்தான் உலகத்திலுள்ள ஸகல வியவஹாரங்களும் நடக்கின்றன. அது தான் வாஸ்தவமாக "இருக்கும்" பதார்த்தம், அதிலேயே ஞாபகத்தைச் செலுத்திவிட்டால் வெறும் தோற்ற மாயிருக்கிற உலகத்தில் மனஸ் ஈடுபடாது. இவ்வுலகத்திலுள்ள எந்த வஸ்துவிலும் ஆசை ஏற்பட நியாயமில்லை. இவ்விதம் வெறும் தோற்றத்திற்கு மதிப்புக் கொடுக்கா மலேயிருக்கும் மனேநிலை வைராக்கியம் எனப்படுகிறது. இந்த மனேநிலை முற்ற முற்ற உலகத்தோற்றமே மறைந்து அதற்கு அடிப்படையான ஆத்ம தத்வம் விளங்க வாரம்பிக்கும். அது நன்கு விளங்கி விட்டால் உலகமே தனித்துக் கிடையாது என்ற அனுபவம் ஏற்பட்டு விடும். அப்பொழுது நிரதிசயமான ஆத்மானந்த அனுபவத்திலே யே நிலைத்திருக்கமுடியும்.

**(42)**

அவ்வித ஆனந்தானுபவ நிலையில், உலகத்தோற்றமிருக்கும் வரை "ஜீவன் முக்தி" யென்றும், உலகம் மறைந்து விட்டபிறகு "விதேஹமுக்தி" யென்றும் இரண்டு படிகள் உண்டென்று அடுத்த சுலோகத்தில் அவைகளையும் அவைகள் ஏற்படுவதற்குள்ள ஸாதனங்களையும் சொல்கிறுர்.

**जीवन्मुक्तिर्मुमुक्षोः प्रथममथ ततो मुक्तिरात्यन्तिकी च**
**तेऽभ्यासज्ञानयोगात् गुरुचरणकृपापाङ्गसङ्गेन लब्धात् ।**
**अभ्यासोऽपि द्विधा स्यादधिकरणवशात् दैहिकों मानसश्च**
**शारीरस्त्वासनाद्यो ह्युपर तिरपरो ज्ञानयोगः पुरोक्तः ॥ ४२ ॥**

**ஜீவன்முக்திர்முமுக்ஷோ: ப்ரத²மமத² ததோ முக்திராத்யந்திகீ ச**
**தே(அ)ப்⁴யாஸஜ்ஞானயோகா³த் கு³ருசரணக்ருபாபாங்க³ஸங்கே³ன லப்³தா⁴த் ।**
**அப்⁴யாஸோ(அ)பி த்³விதா⁴ ஸ்யாத³தி⁴கரணவஶாத் தை³ஹிகோம் மானஸஶ்ச**
**ஶாரீரஸ்த்வாஸநாத்³யோ ஹ்யுபர திரபரோ ஜ்ஞானயோக³: புரோக்த: ॥ 42 ॥**

**मुमुक्षोः** = மோக்ஷத்தை விரும்புகிறவருக்கு,
**முமுக்ஷோ:**

**प्रथमं** = முதலில்,
**ப்ரத²மம்**

**जीवन्मुक्तिः** = ஜீவன் முக்தி,
**ஜீவன்முக்தி:**

**ततः** = அதற்கு,
**தத:**

**अथ** = பிறகு,
**அத²**

**आत्यन्तिकी** = எல்லை மீறின (விதேஹ),
**ஆத்யந்திகீ**

**मुक्तिः च** = முக்தியும்,
**முக்தி: ச**

**ते** = அவையிரண்டும்,
**தே**

**गुरुचरण-कृपा-अपाङ्ग-सङ्गेन** = குரு நாதருடைய - கருணை - கடாக்ஷத்தின் - ஸங்கத்தினுல்,
**கு³ருசரண-க்ருபா-அபாங்க³-ஸங்கே³ன**

| | | |
|---|---|---|
| **लब्धात्**<br>**லப்³தா⁴த்** | = | அடையப்படும், |
| **अभ्यास-ज्ञानयोगात्**<br>**அப்⁴யாஸ-ஜ்ஞானயோகா³த்** | = | அப்பியாஸத்திஞலும் - ஞான யோகத்திஞலும் (ஏற்படுகின்றன), |
| **अभ्यासः**<br>**அப்⁴யாஸ:** | = | அந்த அப்பியாஸம், |
| **अपि**<br>**அபி** | = | கூட, |
| **अधिकरण-वशात्**<br>**அதி⁴கரண-வஶாத்** | = | (எதில் அப்பியாஸம் செய்யப்படுகிறதோ அந்த) ஆசிரயத்தின் வேறுபாடு காரணமாக, |
| **दैहिकः**<br>**தை³ஹிக:** | = | தேஹத்தைக் குறித்தது, |
| **मानसः च**<br>**மானஸ: ச** | = | மனஸைக்குறித்தது என்று, |
| **द्विधा**<br>**த்³விதா⁴** | = | இருவகையாக, |
| **स्यात्**<br>**ஸ்யாத்** | = | ஆகும். (அவ்விரண்டில்), |
| **शारीरः तु**<br>**ஶாரீர: து** | = | தேஹத்தைக் குறித்தது என்பதோ, |
| **आसना-आद्यः**<br>**ஆஸஞ-ஆத்³ய:** | = | ஆஸனம் -முதலியவை, |
| **अपरः**<br>**அபர:** | = | மற்ரென்று, |
| **उपरतिः हि**<br>**உபரதி: ஹி** | = | ஸகல வியாபாரங்களிலிருந்தும்) ஓய்வு அடைதல் என்று பிரஸித்தம், |
| **ज्ञानयोगः**<br>**ஞானயோக³:** | = | ஞானயோகம், |
| **पुरः**<br>**புர:** | = | முன்ஞல், |
| **उक्तः**<br>**உக்த:** | = | சொல்லப்பட்டிருக்கிறது. |

குருநாதரை சிரத்தையுடனும் பக்தியுடனும் சரணமடைந்து அவரை நமஸ்காரம் சுசுரூஷை முதலிய ஸேவைகளால் ஸந்தோஷப்படுத்தி அவருடைய பரிபூர்ண மான அனுக்ரஹம் பெற்ருல்தான் அப்யாஸமோ ஞானயோகமோ ஸித்திக்கும். அப்யாஸம் என்பது ஞானயோகத்திற்கு பூர்வாங்கம். அது இரண்டு விதம் என்கிருர். யமம், நியமம் என்ற இரண்டு யோகாங்கங்களும் எல்லாவித அப்யாஸங்களுக்கும்

பொதுவாக வேண்டியிருப்பதால் அவைகளை இங்கே தனித்து எடுத்துச் சொல்ல வில்லை. அவைகளுக்கு மேலுள்ள ஆஸனம். பிராணுயாமம், பிரத்யாஹாரம் என்ற மூன்றும் முறையே சரீரத்தையும், சரீரத்தில் ஸஞ்சரிக்கும் பிராணனையும், சரீரமூலமாக சேஷ்டிக்கும் இந்திரியங்களையும், நிக்ரஹம் செய்வதாயிருப்பதால், இம்மூன்றையும் சாரீர அப்யாஸம் என்கிறுர். இவைகளுக்கு மேலுள்ள தாரனை, தியானம். ஸமாதி. இம்மூன்றும் மனதை இழுத்துப்பிடித்தல், ஒரு முகமாய்ச் செய்தல், அசைவற்றிருக்கச் செய்தல், என்ற முறையில் மானஸிக அப்யாஸம் என்கிறுர்.

அந்த ஸமாதி நிலை ஏற்பட்டாலும் சிலருக்கு அந்நிலை தானுகவே கலைந்து உலகம் தோன்றலாம்; சிலருக்கு தானுகக் கலையாமல் வெளி நிமித்தத்தினுல் மாத்திரம் கலைந்து உலகம் தோன்றலாம்; இவ்விருவரையும் பிரஹ்ம வித்வான். பிரஹ்ம வித்வரீயான் என்பார்கள்; இவர்களுக்கு உலகத்தோற்றமிருக்கக்கூடியதால் உலகம் பொய்தான் என்ற அறிவு இருந்தும் கூட, உலக வியவஹாரங்களில் ஈடுபடக்கூடியவர்களே; ஆகையால் இவர்களை ஜீவன் முக்தர் என்று சொல்லப்படு கிறது. என்ன நிமித்தம் ஏற்பட்டாலும் ஸமாதி கலையாமலேயிருந்து விடும். ஞானிக்கு உலகம் தோன்றவே தோன்றுததினுல் அவருக்கு ஆபாஸமாகக்கூட சரீரம் தோன்றுது; ஆகையால் பிரஹ்ம வித்வரிஷ்டரென்ற அவரை விதேஹமுக்தர் என்றே சொல்லலாம். ஆனுல் மற்றவர்கள் பார்வையில் அவர் சரீரத்துடனிருப் பதாகத் தெரிவதால்.அவரையும் ஜீவன் முக்தர் என்றும் சொல்வதுண்டு. ஞானயோக த்தில் ஏற்படக்கூடிய அனுபவ தாரதம்யத்தினுல் இந்த வித்யாஸம் ஏற்படுகிறது. ஆனுலும் இவர்கள் யாவரும் பிரஹ்ம வித்துக்கள் என்பதில் ஸந்தேஹமில்லை.

சரீர - இந்திரிய -வியவஹாரங்களிலிருந்து நிவிருத்தி அடைந்தாலொழிய மானஸிக அப்யாஸம் ஸாத்தியமாகக் கூடியதில்லை யானதினுல் அவ்வப்யாஸ த்தை "உபரதி" (ஓய்வு) என்ற சப்தத்தினுலேயே இந்த சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கி றுர்,

**(43)**

அந்த பிரஹ்மானந்த அனுபவத்தை இந்த சரீரத்திலிருந்தபடியே யோகாப்யாஸ முறையில் அடையலாம் அல்லது கிரம முக்தி யென்ற ரீதியாய் இந்த சரீரம் விட்டு பிரஹ்ம லோகம் போய் அடையலாம் என்று இரண்டு விதமாயிருப்பதால் இரண்டையுமே அடுத்த சுலோகத்தில் குறிக்கிறுர். இவ்விரண்டு பேர்களுக்கும் கொஞ்சம் அவித்யா சேஷமிருக்கிறதென்று தாத்பர்யம். அவித்யை பூராவும் பாக்கியன்னியில் போய் விட்டால் இந்த யோகரீதிக்காவது லோகாந்தரம் போவதற்காவது எவ்வித அவசியமுமில்லாமல் இங்கேயே முக்தி அடைந்து பிரஹ் மத்துடன் கலந்து விடுகிறுர். அந்த தசையை பின்னுல் 46 - வது சுலோகத்தில் வர்ணி க்கிறுர்.

**सर्वानुन्मूल्य कामान् हृदि कृतनिलयान् क्षिप्तशङ्कूनिवोच्चैः**
**दीर्यद्दहाभिमानः त्यजति चपलता आत्मदत्तावधानः ।**
**यात्यूर्ध्वस्थानमुच्चैः कृतसुकृतभरो नाडिकाभिर्विचित्रं**
**नीलश्वेता रुणाभिः स्रवदमृतभरं गृह्यमाणात्मसौख्यः ॥ ४३ ॥**

**ஸர்வானுன்மூல்ய காமான் ஹ்ருதி³ க்ருதநிலயான் க்ஷிப்தஶங்கூனிவோச்சைः**
**தீ³ர்யத்³த³ஹாபி⁴மானः த்யஜதி சபலதா ஆத்மத³த்தாவதா⁴னः ।**
**யாத்யூர்த்⁴வஸ்தா²னமுச்சைः க்ருதஸுக்ருதப⁴ரோ நாடி³காபி⁴ர்விசித்ரம்**
**நீலஶ்வேதா ருணாபி⁴ः ஸ்ரவத³ம்ருதப⁴ரம் க்³ருஹ்யமாணாத்மஸௌக்²யः ॥ 43 ॥**

| | | |
|---|---|---|
| **क्षिप्तशङ्कूनिव**<br>**க்ஷிப்தஶங்கூனிவ** | = | எறியப்பட்ட இரும்பு முளைகளைப்போல, |
| **हृदि**<br>**ஹ்ருதி³** | = | ஹ்ருதயத்தில், |
| **कृत-निलयान्**<br>**க்ருத-நிலயான்** | = | குடி கொண்டிருக்கிற, |
| **सर्वान्**<br>**ஸர்வான்** | = | எல்லா, |
| **कामान्**<br>**காமான்** | = | ஆசைகளையும், |
| **उच्चैः**<br>**உச்சைः** | = | உயரேர (நன்றாக), |
| **उन्मूल्य**<br>**உன்மூல்ய** | = | வேருடன் எடுத்து விட்டு, |
| **दीर्यत्-देह-अभिमानः**<br>**தீ³ர்யத்-தே³ஹ-அபி⁴மானः** | = | தேஹத்தில் அபிமானம் நீங்கியவராக, |
| **आत्म-दत्त-अवधानः**<br>**ஆத்ம-த³த்த-அவதா⁴னः** | = | ஆத்மாவிலேயே கவனம் வைத்தவராக இருந்து கொண்டு, |
| **चपलतां**<br>**சபலதாம்** | = | (அனாத்ம பதார்த்தங்களில் உள்ள) ஆவலை, |
| **त्यजति**<br>**த்யஜதி** | = | விட்டு விடுகிறார். (பிறகு), |
| **कृत सुकृत-भरः**<br>**க்ருத ஸுக்ருத-ப⁴ரः** | = | செய்திருக்கும் - புண்ணியங்களை - எடுத்துக் கொண்டவராய், |
| **गृह्यमाण-आत्म-सौख्यः**<br>**க்³ருஹ்யமாண-ஆத்ம-ஸௌக்²யः** | = | ஆத்மானந்தத்தை அனுபவிப்பவராய், |

| | | |
|---|---|---|
| **नील-श्वेत-अरुणाभिः**<br>**நீல-ஶ்வேத-அருணாபி⁴:** | = | கருப்பு - வெளுப்பு - சிவப்பு வர்ணமுள்ள, |
| **नाडिकाभिः**<br>**நாடி³காபி⁴:** | = | நாடிகளால், |
| **विचित्रं**<br>**விசித்ரம்** | = | பலவிதமாயிருக்கிறதும், |
| **स्रवत्-अमृत-भरं**<br>**ஸ்ரவத்-அம்ருத-ப⁴ரம்** | = | ஏராளமாய் - அமிருகத்தை பொழிகிறதுமான, |
| **उच्चैः**<br>**உச்சை:** | = | மேலே, |
| **ऊर्ध्व-स्थानं**<br>**ஊர்த்⁴வ-ஸ்தா²னம்** | = | மேலான் - ஸ்தானத்தை, |
| **याति**<br>**யாதி** | = | அடைகிறுர். |

யோகரீதியாய் இந்த சுலோகத்திற்கு அர்த்தம் பார்ப்பதானுல்

**ऊर्ध्व-स्थानं**

**ஊர்த்⁴வ-ஸ்தா²னம்**

மேலான ஸ்தானம் என்பது பிரஹ்மாந்திரமாகும். அதில் இடை, பிங்களை, ஸுஷும்னை மூன்று நாடிகளும் ஒன்றுய்விடுகிறதென்று சொல்லப்படுவதால்

**नीलश्वेतारुणाभिः नाडिकाभिर्विचित्रं**

**நீலஶ்வேதாருணாபி⁴: நாடி³காபி⁴ர்விசித்ரம்**

(கருப்பு வெளுப்பு சிவப்பு நாடிகளால் பல விதமாயுள்ளது) என்ற விசேஷணமும் பிரஹ்மாந்திரத்திலிருந்து ஆனந்தாமிருதம் பிரவஹிக்குமென்றும் சொல்லப்படுவ தால்

**स्रवदमृतभरं**

**ஸ்ரவத³ம்ருதப⁴ரம்**

(ஏராளமாய் அமிருதத்தைப் பொழிகிற) என்ற விசேஷணமும், பொருந்தும்.

மேலான ஸ்தானம் என்பது பிரஹ்ம லோகம் என்று எடுத்துக் கொண்டால் அங்கேயும் ஸத்வ பிரதானமான விஷ்ணு, ரஜ: பிரதானமான் பிரஹ்மா, தம: பிரதானமான ருத்ரர் இவர்களுக்கு ஸ்தானமிருப்பதாலும் ஸாதாரணமாக ஸ்த்வத்தை, வெளுப்பு என்றும் ரஜஸை சிவப்பு என்றும் தமஸை கருப்பு என்றும்

சொல்வதினுலும், அங்கேயும் ஆனந்தாமிருதம் ஏராளமாய் இருக்குமாதலாலும், அவ்விசேஷணங்கள் பொருந்தக் கூடியனவேயாம்.

இந்த சுலோகத்திற்கு மூல சுருதியான பிரஹதாரண்யக உபநிஷத்தில்

**तेन धीराः अपियन्ति ब्रह्मविदः स्वर्गं लोकमित ऊर्ध्वं विमुक्ताः ॥** IV 4 (8)

**தேன தீ⁴ராः அபியந்தி ப்³ரஹ்மவித³ः ஸ்வர்க³ம் லோகமித**
**ஊர்த்⁴வம் விமுக்தாः ॥**

**तस्मिन शुक्लयुक्त नीलमाहुः पिङ्गलं हरितं लोहितं च ।**
**एष पन्था ब्रह्मणा हानुमितैः तेनैति ब्रह्मवित् पुण्यकृत् तैजसश्च ॥** IV 4 (9)

**தஸ்மின ஶுக்லயுக்த நீலமாஹுः பிங்க³லம் ஹரிதம் லோஹிதம் ச ।**
**ஏஷ பந்தா² ப்³ரஹ்மணா ஹானுமிதைः தேனைதி ப்³ரஹ்மவித்**
**புண்யக்ருத் தைஜஸஶ்ச ॥**

என்ற வாக்கியத்தில் வெளுப்பு, கருப்பு, மஞ்சள், பச்சை, சிவப்பு ஆகிய ஐந்து வர்ணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த சுலோகத்தில் விட்டுப்போன மஞ்சளையும் பச்சையையும் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்று தோன்றுகிறது. தவிரவும்

**यदा सर्वे प्रमुच्यन्ते काम येस्य हृदि श्रिताः ।**
**अथ मर्त्योऽमृतो भवति अत्र ब्रह्म समश्नुते ॥** IV 4 (7)

**யதா³ ஸர்வே ப்ரமுச்யந்தே காம யேஸ்ய ஹ்ருதி³ ஶ்ரிதாः ।**
**அத² மர்த்யோ(அ)ம்ருதோ ப⁴வதி அத்ர ப்³ரஹ்ம ஸமஶ்னுதே ॥**

(காடகோபநிஷ்த் VI 14)

என்ற வாக்கியத்தில் ஸர்வகாமங்களும் அற்றவருக்கு லோகாந்தரம் போவது கிடையாது என்று ஏற்படுவதினுல், இந்த சுலோகத்தில் கண்ட ஞானிக்கு ஸ்வல்பம் அவித்யையும் அதினுல் பிரஹ்மலோகாதி அனுபவ இச்சையும் இருக்குமென்று நினைக்கவேண்டியிருக்கிறது. எவ்வித காமமற்றவனுய் அவித்யை மாத்திரம் இருக்கிறவனுகிய பிராக்ஞன் அதாவது ஸுஷுப்தி தசையிலிருக்கும் ஜீவன் "ஹிதா" என்கிற நாடிகளில் ஒடுங்கியிருப்பதாக அதே உபநிஷத்தில் சொல்லும் போதும் அந்த நாடிகள் மேலே கண்ட ஐந்துவித வர்ணங்களுடன் கூடினவையென்று வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

**ता वा अस्यैता हिता नाम नाट्यो यथा केशः सहस्रधा भिन्नः तावताऽणिम्ना तिष्ठन्ति शुक्लुभ्य नीलस्य पिङ्गलस्य हरितस्य लोहितस्य पूर्णाः ... IV 3 (20).**

| | | |
|---|---|---|
| **मृषा-एव**<br>**ம்ருஷா-ஏவ** | = | பொய்யாகவே இருந்துகொண்டு, |
| **शुक्तिका-अज्ञान-हेतुः**<br>**ஶுக்திகா-அஜ்ஞான-ஹேதுஃ** | = | சிப்பி விஷயமான- அறிவின்மையை - காரணமாகக்கொண்டும், |
| **अम्भः**<br>**அம்ப⁴ஃ** | = | ஜலமானது, |
| **किरण-अज्ञानतः**<br>**கிரண-அஜ்ஞானதஃ** | = | ஸூர்யகிரணத்தின் - அறியாமையினுலும், |
| **भुजङ्गः**<br>**பு⁴ஜங்க³ஃ** | = | பாம்பானது, |
| **रज्जु-अज्ञानात्**<br>**ரஜ்ஜு-அஜ்ஞாளுத்** | = | கயிற்றை - அறியாததினுலும், |
| **स्फुरति**<br>**ஸ்பு²ரதி** | = | விளங்குகிறது. (அவ்விதம் பொய்யாய் தோன்றுவதும் கூட), |
| **निमेषं**<br>**நிமேஷம்** | = | ஒரு நிமிஷம், |
| **सुख-भय-कृत्**<br>**ஸுக²-ப⁴ய-க்ருத்** | = | ஸுகத்தையும் - பயத்தையும் - உண்டு பண்ணுகிறது, |
| **अतः**<br>**அதஃ** | = | ஆகையால், |
| **इदं**<br>**இத³ம்** | = | (பார்க்கப்படுகிற) இது, |
| **दृष्टि-सृष्टं**<br>**த்³ருஷ்டி-ஸ்ருஷ்டம்** | = | பார்க்கும் ஸமயத்தில் - ஸ்ருஷ்டிக்கப்பட்டது |
| **किल**<br>**கில** | = | அல்லவா? |

(பார்வைக்கு விஷயம்) - என்று சொல்லியிருந்தபோதிலும் பார்வை, கேள்வி முதலான எல்லாவித அறிவுகஊயும் எடுத்துக்கொள்ளவேண்டும். எதெல்லாம் இந்திரியங்களாலோ, மனஸினுலோ அறியப்படுகிறதோ, அதெல்லாம் வெறும் தோற்றம். அவைகளுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள ஆத்மஸ்வரூபத்தை அறியாத காரணத்தினுலேயே தோன்றுகின்றன என்று தாத்பர்யம். தோற்றமாயிருந்தாலும் ஸுகத்திற்கு காரணமாய் "நல்லது" என்று தோன்றலாமென்பதற்கு வெள்ளியையும, ஜலத்தையும் துக்கததிற்கு காரணமாய் "கெட்டது" எனறு தோன்றலாமென்பதற்கு பாம்பையும், திருஷ்டாந்தமாக கொடுத்திருக்கிறுர்.

**(82)**

உலகம் தோற்றந்தான் என்பதற்கு ஆதாரமாக கீதையிலுள்ள வாக்கியத்தின் தாத்பர்யத்தை விளக்கி அடுத்த சுலோகத்தில் காட்டுகிறுர். பகவான் ஜகத் ஸ்ருஷ்டியைப்பற்றி சொல்லும்போது தன்னுடைய ஆசிரயத்திஞல்தான் மாயை ஜகத்தை ஸ்ருஷ்டி செய்கிறது என்கிறுர்.

**मयाऽध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।**
**हेतुनाऽनेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥ ९.१० ॥**

**மயா(அ)த்⁴யக்ஷேண ப்ரக்ருதி꞉ ஸூயதே ஸசராசரம் ।**
**ஹேதுஞ(அ)னேன கௌந்தேய ஜக³த்³விபரிவர்ததே ॥ 9.10 ॥**

தன்ஐன அதிஷ்டானமாகவைத்து ஜகத் தன்னிடத்தில் தோன்றுவதால், அது தன்னிடத்தில் இருக்கிறதே தவிர, தான் அதனிடத்தில் இல்ஐல என்றும் சொல்கிறுர்.

**मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना।**
**मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ९.४ ॥**

**மயா ததமித³ம் ஸர்வம் ஜக³த³வ்யக்தமூர்தினா।**
**மத்ஸ்தா²னி ஸர்வபூ⁴தானி ந சாஹம் தேஷ்வவஸ்தி²த꞉ ॥ 9.4 ॥**

**मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय।**
**मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥ ७.७ ॥**

**மத்த꞉ பரதரம் நான்யத்கிஞ்சித³ஸ்தி த⁴னஞ்ஜய।**
**மயி ஸர்வமித³ம் ப்ரோதம் ஸூத்ரே மணிக³ணா இவ ॥ 7.7 ॥**

**ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये।**
**मत्त एवेति तान्विद्धि नत्वहं तेषु ते मयि ॥ ७.१२ ॥**

**யே சைவ ஸாத்த்விகா பா⁴வா ராஜஸாஸ்தாமஸாஶ்ச யே।**
**மத்த ஏவேதி தான்வித்³தி⁴ நத்வஹம் தேஷு தே மயி ॥ 7.12 ॥**

**यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन।**
**न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ १०.३९ ॥**

**யச்சாபி ஸர்வபூ⁴தானாம் பீ³ஜம் தத³ஹமர்ஜுன।**
**ந தத³ஸ்தி வினா யத்ஸ்யான்மயா பூ⁴தம் சராசரம் ॥ 10.39 ॥**

ஆரோபிதமான ஜகத்திற்குதான் அதிஷ்டானம் என்கிற முறையில் ஜகத் தன்னிடமிருப்பதாகச் சொன்ஞரே தவிர, தன்னிடத்தில் வாஸ்தவமாக ஜகத் இல்ஐலயென்றும் சொல்கிறுர்.

**न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम्।**
**भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावनः ॥ ९.५ ॥**
**ந ச மத்ஸ்தா2னி பூ4தானி பஶ்ய மே யோக3மைஶ்வரம்।**
**பூ4தப்4ருன்ன ச பூ4தஸ்தோ2 மமாத்மா பூ4தபா4வன: ॥ 9.5 ॥**

"தோன்றின வெள்ளி எங்கே இருக்கிறது?" என்று கேட்டால் "கிளிஞ்சலில்" என்று தான் பதில் சொல்லவேண்டும். "கிளிஞ்சலில் வெள்ளி இருக்கிறதா?" என்று கேட்டால், "இல்லை" என்றே பதில் சொல்லவேண்டும். இப்பதில்கள் ஒனறுக்கொன்று மாறுபட்டதாகவும் விரோதமாகவும் தோன்றின போதிலும், இரண்டுமே வாஸ்தவம். அப்படியேதான் "ஜகத் பகவானிடத்தில் இருக்கிறது" "பகவானிடததில் ஜகத் இல்லை" என்ற இரண்டு வாக்கியங்களும் என்று ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்லுகிறர் -

**मायाध्यासाश्रयेण प्रविततमखिलं यन्मया तेन मत्स्था -**
**न्येतान्येतेषु नाहं यदपि हि रजतं भाति शुक्तौ न रौप्ये ।**
**शुक्त्यंशस्तेन भूतान्यपि मयि न वसन्तीति विष्वग्विनेता**
**प्राहास्माद्दृश्यजातं सकलमपि मृषैवेन्द्रजालोपमेयम् ॥ ८२ ॥**
**மாயாத்4யாஸாஶ்ரயேண ப்ரவிததமகி2லம் யன்மயா தேன மத்ஸ்தா2 -**
**ந்யேதான்யேதேஷு நாஹம் யத3பி ஹி ரஜதம் பா4தி ஶுக்தௌ ந ரௌப்யே ।**
**ஶுக்த்யம்ஶஸ்தேன பூ4தான்யபி மயி ந வஸந்தீதி விஷ்வக்3வினேதா**
**ப்ராஹாஸ்மாத்3த்3ருஶ்யஜாதம் ஸகலமபி ம்ருஷைவேந்த்3ரஜாலோபமேயம்**
**॥ 82 ॥**

**माया-अध्यास-आश्रयेण** = மாயையினுல் ஏற்படும் - அத்யாஸத்திற்கு
**மாயா-அத்4யாஸ-ஆஶ்ரயேண** (தோற்றமாகிய ஆரோபிதத்திற்கு) ஆசிரயமாய் (அதிஷ்டானமாய்) இருக்கும்,

**मया** = என்னுல்,
**மயா**

**अखिलं** = எல்லாம்,
**அகி2லம்**

**प्रविततं** = நன்குவிஸ்தாரமாய் வியாபிக்கப்பட்டிருக்கிறது,
**ப்ரவிததம்**

**यत्** = என்பது எதுவோ,
**யத்**

**तेन** = அதினுல்,
**தேன**

**एतानि** = இவைகள் எல்லாம்,
**ஏதானி**

| | | |
|---|---|---|
| मत्-स्थानि<br>மத்-ஸ்தா²னி | = | என்னிடத்தில் இருப்பவைகள், |
| एतेषु<br>ஏதேஷு | = | இவைகளிடத்தில், |
| अहं<br>அஹம் | = | நான், |
| न<br>ந | = | இருப்பதில்லை, |
| यत्-अपि-हि<br>யத்-அபி-ஹி | = | எதனுல் கூட, |
| शुक्तौ<br>ஶுக்தௌ | = | கிளிஞ்சலில், |
| रजतं<br>ரஜதம் | = | வெள்ளி, |
| भाति<br>பா⁴தி | = | தோன்றுகிறதோ, |
| तेन<br>தேன | = | அதனுல், |
| रौप्ये<br>ரௌப்யே | = | அந்த வெள்ளியில், |
| शुक्ति-अंशः<br>ஶுக்தி-அம்ஶ꞉ | = | கிளிஞ்சலின் - அம்சம் கூட, |
| न<br>ந | = | கிடையாது. (உண்மையில்), |
| भूतानि अपि<br>பூ⁴தானி அபி | = | உண்டான பதார்த்தங்களும், |
| मयि<br>மயி | = | என்னிடத்தில், |
| न वसन्ति<br>ந வஸந்தி | = | இருக்கவில்லை, |
| इति<br>இதி | = | என்று, |
| विष्वक्-विनेता<br>விஷ்வக்-வினேதா | = | ஜகத்திற்கெல்லாம் - ஆசார்யர் (நடத்துகிறவர், பகவான்), |
| प्राह<br>ப்ராஹ | = | சொல்லி இருக்கிருர், |

| | | |
|---|---|---|
| **अस्मात्** **அஸ்மாத்** | = | ஆகையினுல், |
| **ध्रुश्य-जातं** **த்⁴ருஶ்ய-ஜாதம்** | = | பார்க்கப்படுகிற - கூட்டம், |
| **सकलं अपि** **ஸகலம் அபி** | = | எல்லாம்கூட, |
| **इन्द्र जाल-उपमेयं** **இந்த்³ர ஜால-உபமேயம்** | = | இந்திர ஜாலத்திற்கு - ஒப்பிடக் கூடியதாக, |
| **मृषा एव** **ம்ருஷா ஏவ** | = | பொய்யேதான். |

அதிஷ்டானத்தினுடைய ஸத்தையை வைத்துக்கொண்டே ஆரோபிதம் இருப்பதாகத் தோன்றுவதினுல், அதிஷ்டானத்தில் ஆரோபிதம் இருக்கிறதென்று ஒருவாறு சொல்லலாம். ஆனுல் தோற்றத்திற்குக் காரணமாகிய அதிஷ்டான விஷய மான அறியாமை ஏற்படாமலேயிருந்தாலும் ஏற்பட்டு விலகிவிட்டாலும், தோற்றமே ஏற்படாததினுல் அதிஷ்டானத்தில் ஆரோபிதம் இல்லையென்று சொல்வதுதான். நியாயமாகும். தவிரவும், ஆரோபிதத்திற்கு சொந்தமாக ஸத்தையே இல்லாமலிருப்ப பதினுல், அது இன்னொரு ஆரோபிதத்திற்கு அதிஷ்டானமாக இருக்க யோக்கிய தையற்றது அப்படியிருக்க, தனக்கு; ஸத்தையைக் கொடுத்த அதிஷ்டானத் திற்கும் அதிஷ்டானமாய் இருப்பது ஸாத்தியமேயில்லை. மேலும், அதற்கு ஸத்தை யைக் கொடுத்த அதிஷ்டானம் வாஸ்தவமாக "ஸத்" இருக்கும் பதார்த்தமானதினுல் அது வேறு அதிஷ்டானத்தை பேக்ஷிக்காது. ஆகையால், அதிஷ்டானமாயிருக்கும் பதார்த்தம் ஆரோபிதத்தில் இருக்கிறது என்று சொல்வது நியாயமாகாது. இந்த முறையில்தான் பகவான் "என்னிடம் ஜகத் இருக்கிறது. ஜகத்தில் நான் இல்லை" என்றும் "வாஸ்தவத்தில் என்னிடம் ஜகத் இல்லை" என்றும் சொல்கிருர். எது வாஸ்த வமாய் இல்லாமல் இருப்பதாகத் தோன்றுகிறதோ அது இந்திரஜால வித்தையினுல் காட்டப்படுகிற பொய்யான பதார்த்தங்கள் போலவேதான்.

**(83)**

ஜகத் தோன்றுவதற்குக் காரணம் மாயையினுல் ஏற்படும் அத்யாஸம் என்று சொல்லப்பட்டது. அதாவது, தான் பிரஹ்மம் என்பதை அறியாமல் தன்னை சரீரம் முதலானதென்று பிராந்தியினுல் நினைத்துக்கொண்டிருப்பது அத்துடன் அந்த நினைப்பு நின்றுவிடுகிறதில்லை. ஜகத்தில் தோன்றும் பதார்த்தங்களில் "நல்லது, கெட்டது", "வேண்டும், வேண்டாம்" என்கிற எண்ணங்களும் ஏற்படுவதினுல், நல்ல தாய் தோன்றும் பதார்த்தத்தை ஸம்பாதித்து ஸுகமடைவதற்காகவும், கெட்டதாய் தோன்றும் பதார்த்தத்தை விலக்கி துக்கமடையாமல் இருப்பதற்கும் பிரவிருத்தி செய்யும்படி ஏற்படுகிறது. அதினுல் புண்யம், பாபம், ஸுகம், துக்கம் எல்லாம் ஏற்படுகின்றன. அத்யாஸம் ஸகல ஜீவர்களுக்குமிருப்பதினுல் இவ்வித பிரவிருத்தி களில்லாமல் யாராலும் இருக்க முடியாது என்ற தத்வத்தை பிருஹதாரண்யக

உபநிஷத்தில் கண்டபடிக்கும் பகவத்கீதையில் கண்டபடிக்கும் ஆசார்யார் எடுத்துச் சொல்கிறுர். இங்கே மனிதன் இறந்தபிறகு எங்கே போகிறுன் என்று ஜரத்காருவின் புத்திரரான ஆர்த்தபாகர் என்பவர் யாக்ஞவல்க்யரைக் கேட்கும்போது “கர்மாவை அனுஸரித்து புண்ய கர்மாவாயிருந்தால் புண்யலோகத்திற்கும் பாபகர்மாவா இருந்தால் பாப லோகத்திற்கும்” என்று அவர் பதில் சொல்கிறுர்; அப்பொழுது அவ்விருவரும் பேசிக்கொண்டிருந்ததும் சிலாகித்துக் கொண்டிருந்ததும் கர்மாவைத் தான் என்று உபநிஷத் சொல்கிறது.

**तौ ह यदूचतुः कर्म हैव तदूचतुरथ ह यत्प्रशसतुः कर्म हैव तत्प्रशसतुः पुण्यो वै पुण्येन कर्मणा भवति पापः पापेनेति ततो ह जारत्कारव आर्तभाग उपरराम ।**

**தௌ ஹ யதூ³சதுஃ கர்ம ஹைவ ததூ³சதுரத² ஹ யத்ப்ரஶஸதுஃ கர்ம ஹைவ தத்ப்ரஶஸதுஃ புண்யோ வை புண்யேன கர்மணு ப⁴வதி பாபஃ பாபேனேதி ததோ ஹ ஜாரத்காரவ ஆர்தபா⁴க³ உபரராம ।**

பகவானும் பிராணிகள் பூர்வ கர்மாவினுல் ஏவப்படுகிறபடியால் மேற்கொண் டும் ஏதேனும் பிரவிருத்தி செய்து கொண்டேதானிருப்பார்கள் என்பதை

**न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।**
**कार्यते हि वशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥** III, 5

**ந ஹி கஶ்சித க்ஷணமபி ஜாது திஷ்ட²த்யகர்மக்ருத் ।**
**கார்யதே ஹி அவஶேஃ கர்ம ஸர்வஃ ப்ரக்ருதிலைஃ கு³ணைஃ ॥**

**सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः।**
**निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥** XIV 5

**ஸத்த்வம் ரஜஸ்தம இதி கு³ணுஃ ப்ரக்ருதிஸம்ப⁴வாஃ।**
**நிப³த்⁴னந்தி மஹாபா³ஹோ தே³ஹே தே³ஹினமவ்யயம் ॥**

**न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः।**
**यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥** XVIII 11

**ந ஹி தே³ஹப்⁴ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷதஃ।**
**யஸ்து கர்மப²லத்யாகீ³ ஸ த்யாகீ³த்யபி⁴தீ⁴யதே**

என்ற சுலோசங்களில் சொல்லியிருக்கிறுர்

**हेतुः कर्मैव लोके सुखतदितरयोरेवमज्ञोऽविदित्वा**
**मित्रं वा शत्रुरित्थं व्यवहरति मृषा याज्ञवल्क्यार्तभागौ ।**
**यत्कर्मैवोचतुः प्राग्जनकनृपगृहे चक्रतुस्तत्प्रशंसां**
**वंशोत्तंसो यदूनामिति वदति न कोऽप्यत्र तिष्ठत्यकर्मा ॥ ८३ ॥**

**ஹேது: கர்மைவ லோகே ஸுக[2]ததி[3]தரயோரேவமஜ்ஞோ(அ)விதி[3]த்வா மித்ரம் வா ஶத்ருரித்த[2]ம் வ்யவஹரதி ம்ருஷா யாஜ்ஞவல்க்யார்தபா[4]கௌ[3] । யத்கர்மைவோசது: ப்ராக்[3]ஜனகந்ருபக்[3]ருஹே சக்ரதுஸ்தத்ப்ரஶம்ஸாம் வம்ஶோத்தம்ஸோ யதூ[3]நாமிதி வத[3]தி ந கோ(அ)ப்யத்ர திஷ்ட[2]த்யகர்மா ॥ 83 ॥**

| | | |
|---|---|---|
| **लोके**<br>**லோகே** | = | உலகத்தில், |
| **सुख-तदितरयोः**<br>**ஸுக[2]-ததி[3]தரயோ:** | = | ஸுகத்திற்கும் - அதிலிருந்து வேறுகிய துக்கத்திற்கும், |
| **हेतुः**<br>**ஹேது:** | = | காரணம், |
| **कर्म एव**<br>**கர்ம ஏவ** | = | கர்மாதான், |
| **एवं**<br>**ஏவம்** | = | இவ்விதமாக, |
| **अविदित्वा**<br>**அவிதி[3]த்வா** | = | தெரிந்து கொள்ளாமல், |
| **अज्ञः**<br>**அஜ்ஞ:** | = | அறிவற்றவன், |
| **मित्रं वा**<br>**மித்ரம் வா** | = | நண்பன் என்ருே, |
| **शत्रु**<br>**ஶத்ரு** | = | சத்ரு என்ருே, |
| **इत्थं**<br>**இத்த[2]ம்** | = | என்று, |
| **मृषा**<br>**ம்ருஷா** | = | வீணுக, |
| **व्यवहरति**<br>**வ்யவஹரதி** | = | வியவஹாரம் செய்கிருன், |
| **यत्**<br>**யத்** | = | எந்த, |
| **कर्म एव**<br>**கர்ம ஏவ** | = | கர்மாவையே, |
| **प्राक्**<br>**ப்ராக்** | = | முன்னுல், |
| **जनक-नृप-गृहे**<br>**ஜனக-ந்ருப-க்[3]ருஹே** | = | ஜனக - ராஜன் - கிருஹத்தில், |

**याज्ञवल्क्य-आर्तभागौ** = யாக்ஞவல்க்யரும் ஆர்த்தபாகரும்,

**யாஜ்ஞவல்க்ய-ஆர்தபா$^{4}$கௌ$^{3}$**

**ऊचतुः** = சொல்லிக் கொண்டார்கள்,

**ஊசது:**

**तत्-प्रशंसां** = அது விஷயமான - பிரசம்ஸையை,

**தத்-ப்ரஶம்ஸாம்**

**चकतुः** = செய்தார்கள் (அதை சிலாகித்தார்கள்),

**சகது:**

**यदूनां** = யதுக்களுடைய,

**யதூ$^{3}$னாம்**

**वंश-उत्तंसः** = வம்சத்திற்கு அலங்காரமாயிருந்தவர் (ஸ்ரீ கிருஷ்ண பகவான்),

**வம்ஶ-உத்தம்ஸ:**

**अत्र** = இங்கே உலகத்தில்,

**அத்ர**

**कः अपि** = யாருங்கூட,

**க: அபி**

**अकर्मा** = கர்மா செய்யாதவராக,

**அகர்மா**

**न तिष्ठति** = இருப்பதில்லை,

**ந திஷ்ட$^{2}$தி**

**इति** = என்று,

**இதி**

**वदति** = சொல்கிறார்.

**வத$^{3}$தி**

இப்பொழுதுதான் அனுபவிக்கும் ஸுகத்திற்கு முன்னால் செய்த புண்யம்தான் காரணம். இப்பொழுது தான் அனுபவிக்கும் துக்கத்திற்கு முன்னால் தான்செய்த பாபம்தான் காரணம் என்கிற உண்மையை அறியாமல் பலர் தன் ஸுக துக்கங்களுக்கு மனிதர்களே காரணமென்று எண்ணி சிலரை நண்பர்களாகவும் சிலரை எதிரிகளாகவும் பாவித்து வியவஹாரம் செய்கின்றனர்.

**(84)**

கர்மாதான் ஸுக துக்கத்திற்குக் காரணம் என்பது வாஸ்தவம். ஆனால் கர்மாவானது ஜடமானதினால் அதுவாக ஸுக துக்கத்தைக் கொடுக்க சக்தியற்றது. அதைக் காரணமாக வைத்துக்கொண்டு ஸுக துக்கங்களை கொடுப்பதற்கு ஒரு சேதனன் வேண்டும். மரத்தை வெட்டித் தள்ளுவது கோடாலி தான் என்பதில் ஆக்ஷேபனையில்லை. ஆனாலும் அது ஜடமானதினால் அதுவாக வெட்டிவிடாது. ஒரு

மனிதன் அதை கையில் எடுத்து உபயோகித்தால்தான் கோடாலி வெட்டமுடியும். அப்படியே ஸகல ஜீவர்களுக்கும் அந்தந்த கர்மாக்களுக்கு தக்கபடி ஸுக துக்கங்களைக் கொடுப்பதற்கு ஒரு சேதனராகிய ஆத்மா அவசியம்; ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கும் ஒரு சேதனனுகிய ஆத்மா அவசியம். ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கும் ஒரு சேதனனுகிய ஆத்மா அவசியம். பலன் கொடுப்பவரை ஈசுவரன் என்றும், அனுபவிப்பவனை ஜீவன் என்றும் சொல்வார்கள். கர்மா தானுக பலனைக் கொடுக்க முடியாதென்பது அடுத்த சுலோகத்தில் சொல்லப்படுகிறது.

**वृक्षच्छेदे कुठारः प्रभवति यदपि प्राणिनोद्यस्तथापि**
**प्रायोऽन्नं तृप्तिहेतुस्तदपि निगदितं कारणं भोक्तृयत्नः ।**
**प्राचीनं कर्म तद्वद्विषमसमफलप्राप्तिहेतुस्तथापि**
**स्वातन्त्र्यं नश्वरेऽस्मिन्न हि खलु घटते प्रेरकोऽस्यान्तरात्मा ॥ ८४ ॥**

**வ்ருக்ஷச்சே²தே³ குடா²ர: ப்ரப⁴வதி யத³பி ப்ராணினோத்³யஸ்ததா²பி**
**ப்ராயோ(அ)ன்னம் த்ருப்திஹேதுஸ்தத³பி நிக³தி³தம் காரணம்**
**போ⁴க்த்ருயத்ன: ।**
**ப்ராசீனம் கர்ம தத்³வத்³விஷமஸமப²லப்ராப்திஹேதுஸ்ததா²பி**
**ஸ்வாதந்த்ர்யம் நஶ்வரே(அ)ஸ்மின்ன ஹி க²லு க⁴டதே**
**ப்ரேரகோ(அ)ஸ்யாந்தராத்மா ॥ 84 ॥**

**वृक्ष-छेदे** = மரத்தை வெட்டுவதில்,
**வ்ருக்ஷ-சே²தே³**
**कुठारः** = கோடாலியானது,
**குடா²ர:**
**प्रभवति** = சக்தியுள்ளது,
**ப்ரப⁴வதி**
**यत् अपि** = என்றலும்,
**யத் அபி**
**तथा-अपि** = அப்படியும்,
**ததா²-அபி**
**प्राणि-नोद्यः** = பிராணியால் (சேதனனல்),
**ப்ராணி-நோத்³ய:** உபயோகப்படுத்த வேண்டியதாய் இருக்கிறது,
**प्रायः** = ஸாதாரணமாக,
**ப்ராய:**
**अन्नं** = அன்னம்,
**அன்னம்**
**तृप्ति-हेतुः** = திருப்திக்கு காரணம்,
**த்ருப்தி-ஹேது:**

| | | |
|---|---|---|
| **तत् अपि**<br>**தத் அபி** | = | அப்படியிருந்தும், |
| **भवति-यत्र**<br>**ப⁴வதி-யத்ர** | = | சாப்பிடுகிறவனுடைய - பிரயத்னம், |
| **कारणं**<br>**காரணம்** | = | காரணமாக, |
| **निगदितं**<br>**நிக³தி³தம்** | = | சொல்லப்படுகிறது, |
| **तद्वत्**<br>**தத்³வத்** | = | அதைப்போலவே, |
| **प्राचीनं**<br>**ப்ராசீனம்** | = | முன் செய்திருக்கும், |
| **कर्म**<br>**கர்ம** | = | கர்மாதான், |
| **विषम सम-फल-प्राप्ति-हेतुः**<br>**விஷம ஸம-ப²ல-ப்ராப்தி-ஹேதுஃ** | = | கெட்டதோ - நல்லதோ - பலனை அடைவதற்கு - காரணம், |
| **तथा अपि**<br>**ததா² அபி** | = | அப்படியேயானாலும், |
| **नश्वरे**<br>**நஶ்வரே** | = | நாசத்தையடையும் தன்மையுள்ள, |
| **अस्मिन्**<br>**அஸ்மின்** | = | இந்த கர்மாவில், |
| **स्वातन्त्र्यं**<br>**ஸ்வாதந்த்ர்யம்** | = | ஸ்வதந்திரமாக இருக்கும் தன்மை (தானாகவே பலனைக் கொடுக்கக் கூடிய தன்மை), |
| **न हि खलु घटते**<br>**ந ஹி க²லு க⁴டதே** | = | பொருந்தாது என்பது பிரஸித்தமல்லவா? (ஆகையால்), |
| **अस्य**<br>**அஸ்ய** | = | இதற்கு (கர்மாவிற்கு), |
| **प्रेरकः**<br>**ப்ரேரகஃ** | = | பலனைக்கொடுக்கும்படி) ஏவுகிறவர் (செய்பவர்), |
| **अन्तरात्मा**<br>**அந்தராத்மா** | = | உள்ளிருக்கும் ஆத்மா. |

கர்மாவானது செய்யப்படும் ஸமயத்தில் மாத்திரம் இருந்து செய்து முடிந்தவுடன் நாசத்தையடைந்துவிடுவதால், அது பின்னால் ஒரு காலத்தில் பலனைக் கொடுக்கிறது என்பது ஸாத்தியமில்லை என்பதைக் காட்டுவதற்காகத்தான்

**नश्वरे**

**நஶ்வரே**

(நாசமடையக் கூடிய) என்று கர்மா குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்மா செய்யும் போதும் பலன் ஏற்படும்போதும் தொடர்ந்திருக்கிறவனும், பலனுகிய ஸுக துக்கங்கஊ அனுபவிக்கக்கூடியவனுமான ஒரு சேதனன் அவசியம் வேண்டியிருக் கிறது. இதை பகவத் கீதையில்

**कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते।**
**पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥** XIII, 21

**கார்யகாரணகர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே।**
**புருஷ: ஸுக²து³:கா²னாம் போ⁴க்த்ருத்வே ஹேதுருச்யதே ॥**

என்று சொல்லியிருக்கிருர். அனுபவிப்பதற்கு ஜீவன் வேண்டியதாளுலும் அனுபவிப்பதில் அவனுக்குப் பூரா ஸ்வாதந்திரியம் இருந்துவிட்டால் ஸுகத்தை மாத்திரம் அனுபவிப்பானே தவிர துக்கத்தை அனுபவிக்கமாட்டான். ஆகையால் அவனுக்கும் ஸுக துக்கங்களை கர்மானுஸாரமாகக் கொடுப்பதற்கு அவனுக்கு மேல் ஒரு சேதனன் வேண்டியிருக்கிறது அவரே ஈசுவரன். அவரே எல்லா பிராணிக ளுடையவும் ஹ்ருதய குஹையில் கர்மாக்களுக்கெல்லாம் ஸாக்ஷியாக இருந்து கொண்டிருக்கிருர்.

**(85)**

ஈசுவரன் ஒருவர்தான் ஸகல பிராணிகளுக்கும் கர்ம பலஊக் கொடுப்பவர். வேறு எந்த தேவதையை உபாஸித்தாலும் அந்த தேவதையும் ஈசுவரனில் அடங்கின தேயானதிஞல், அந்த உபாஸஊயும் ஈசுவரஊ உபாஸித்ததாகவேதான் ஆகிறது. ஆஞல் இந்த தத்வத்தை ஸாமான்ய ஜனங்கள் அறிவதில்ஊ. அறியாததிஞல் மேலான பிரயோஜனத்தை அடையத் தவறிவிடுகிருர்கள்.

**येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयान्विताः ।**
**तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥** IX. 23.

**யே(அ)ப்யன்யதே³வதா ப⁴க்தா யஜந்தே ஶ்ரத்³த⁴யான்விதா: ।**
**தே(அ)பி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதி⁴பூர்வகம் ॥**

**अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।**
**न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥** IX. 24.

**அஹம் ஹி ஸர்வயஜ்ஞானாம் போ⁴க்தா ச ப்ரபு⁴ரேவ ச ।**
**ந து மாமபி⁴ஜானந்தி தத்த்வேஞதஶ்ச்யவந்தி தே ॥**

அவர்கள் பலவித ஆசைகளைக்கொண்டு மற்ற தேவதைகளை சிரத்தையுடன் ஆராதித்து அந்த தேவதைகள் மூலமாக பலன்களை அடைகிறார்கள்; அந்த பலன்களையும் பகவானே தான் ஏற்படுத்திக்கொடுக்கிறார் என்பதை அவர்கள் அறிவதில்லை; ஆகையால் அப்பலன்களும் சீக்கிரம் நாசத்தை அடைந்துவிடுகின்றன. பகவானையே நேரில் உபாஸித்தால் மற்ற தேவதைகளையும் உபாஸித்ததாக ஆகுமோ உத்தமமான பலனையே அடையலாமே என்பதையும் தெரிந்துகொள்வதில்லை.

**कामैस्तैस्तैर्हृतज्ञानाः प्रपद्यन्तेऽन्यदेवताः ।**
**तं तं नियममास्थाय प्रकृत्या नियताः स्वया ॥** VII 20

**காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞானாঃ ப்ரபத்³யந்தே(அ)ன்யதே³வதாঃ ।**
**தம் தம் நியமமாஸ்தா²ய ப்ரக்ருத்யா நியதாঃ ஸ்வயா ॥**

**स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।**
**लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥** VII 22

**ஸ தயா ஶ்ரத்³த⁴யா யுக்தஸ்தஸ்யாராத⁴னமீஹதே ।**
**லப⁴தே ச ததঃ காமான்மயைவ விஹிதான்ஹி தான் ॥**

**अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।**
**देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥** VII 23

**அந்தவத்து ப²லம் தேஷாம் தத்³ப⁴வத்யல்பமேத⁴ஸாம் ।**
**தே³வாந்தே³வயஜோ யாந்தி மத்³ப⁴க்தா யாந்தி மாமபி**

இவ்விஷயத்தை இரண்டு சுலோகங்களில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச் சொல்கிறார்.

**स्मृत्या लोकेषु वर्णाश्रमविहितमदो नित्यकाम्यादि कर्म**
**सर्वं ब्रह्मार्पणं स्यादिति निगमगिरी संगिरन्तेऽतिरम्यम् ।**
**यन्नासानेत्र जिह्वाकरचरण शिरः श्रोत्र संतर्पणेन**
**तुष्येदङ्गीव साक्षात्तरुरिव सकलो मूलसंतर्पणेन ॥ ८५ ॥**

**ஸ்ம்ருத்யா லோகேஷு வர்ணாஶ்ரமவிஹிதமதோ³ நித்யகாம்யாதி³ கர்ம**
**ஸர்வம் ப்³ரஹ்மார்பணம் ஸ்யாதி³தி நிக³மகி³ரீ ஸங்கி³ரந்தே(அ)திரம்யம் ।**
**யன்னாஸாநேத்ர ஜிஹ்வாகரசரண ஶிரঃ ஶ்ரோத்ர ஸந்தர்பணேன**
**துஷ்யேத³ங்கீ³வ ஸாக்ஷாத்தருரிவ ஸகலோ மூலஸந்தர்பணேன ॥ 85 ॥**

**स्मृत्या** = ஸ்மிருதியினால்,
**ஸ்ம்ருத்யா**

**लोकेषु** = உலகத்தில்,
**லோகேஷு**

| | | |
|---|---|---|
| **वर्ण-आश्रम-विहितं** <br> **வர்ண-ஆஶ்ரம-விஹிதம்** | = | வர்ணம் - ஆசிரமம் - இவைகளை உத்தேசித்து - விதிக்கப்பட்டிருக்கிற, |
| **अदः** <br> **அத³:** | = | அந்தந்த, |
| **नित्य-काम्य-आदि** <br> **நித்ய-காம்ய-ஆதி³** | = | நித்யம் - காம்யம் - முதலான, |
| **कर्म** <br> **கர்ம** | = | கர்மா, |
| **सर्वं** <br> **ஸர்வம்** | = | எல்லாமே, |
| **ब्रह्म-अर्पणं** <br> **ப்³ரஹ்ம-அர்பணம்** | = | பிரஹ்மத்திற்கு - அர்ப்பணமாக, |
| **स्यात्** <br> **ஸ்யாத்** | = | ஆகும், |
| **इति** <br> **இதி** | = | என்று, |
| **निगम-गिरः** <br> **நிக³ம-கி³ர:** | = | வேத - வாக்கியங்கள், |
| **अतिरम्यं** <br> **அதிரம்யம்** | = | வெகு அழகாக, |
| **संगिरन्ते** <br> **ஸங்கி³ரந்தே** | = | சொல்லுகின்றன, |
| **यत्** <br> **யத்** | = | ஏனென்றால், |
| **नासा-नेत्र-जिह्वा-कर-चरण-शिरः-श्रोत्र संतर्पणेन** <br> **நாஸா-நேத்ர-ஜிஹ்வா-கர-சரண-ஶிர:-ஶ்ரோத்ர ஸந்தர்பணேன** | = | மூக்கு - கண் - நாக்கு - கை - கால் - தலை - காது இவைகளுக்கு திருப்தி செய்வதினால், |
| **अङ्गी एव** <br> **அங்கீ³ ஏவ** | = | இந்த அங்கங்களையுடையவர் போலவும், |
| **मूल-संतर्पणेन** <br> **மூல-ஸந்தர்பணேன** | = | வேருக்கு - (உரம், ஜலம், இவற்றின் மூலம்) திருப்தி செய்வதினால், |
| **सकलः** <br> **ஸகல:** | = | பூரா, |
| **तरः इव** <br> **தர: இவ** | = | மரம்போலவும், |

**साक्षात्** = நேராக,

**ஸாக்ஷாத்**

**तुष्येत्** = பகவான் ஸந்தோஷமடைவார்.

**துஷ்யேத்**

## वर्णाश्रमविहितं

### வர்ணாஶ்ரமவிஹிதம்

வர்ணத்தையும், ஆசிரமத்தையும் ஒட்டி விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்களில் ஸூர்யன், வாயு, அக்னி முதலிய தேவதைகளின் ஆராதனை ரூபமாக அநேக கர்மாக்கள் இருக்கும. சிலது அவசியம் செய்யவேண்டிய நித்ய கர்மாக்களாகவும், சிலது ஏதோ நிமித்தத்தைக்கருதிச் செய்யவேண்டிய நைமித்திக கர்மாக்களாகவும், சிலது பாபத்தைப் போக்குவதற்கான பிராயச்சித்த கர்மாக்களாகவும், சிலது விசேஷ மாய் வேண்டப்படும் பலனை உத்தேசித்துச் செய்யும் காம்ய கர்மாக்களாகவும், சிலது உபாஸனரூபமாயும் இருக்கும். எப்படியிருந்தாலும் எல்லா கர்மாக்களையும் செய்து கடைசியில் அவைகளை பிரஹ்மார்ப்பணம் செய்வதுதான் நியாயம். அந்தந்த தேவ தையை உத்தேசித்துக் கர்மாவை செய்துவிட்டு கடைசியில் பிரஹ்மார்ப்பணம் செய்வது உசிதமா என்று தோன்றலாம். ஒரு பெரியவர் கிருஹத்திற்கு வந்தபோது அவருக்கு நல்ல சந்தனத்தைக் கொடுத்து, நல்ல காக்ஷிகளைக்காட்டி, நல்ல ருசியான ஆஹாரம்கொடுத்து, கையில் தாம்பூலாதிகள் ஸமர்ப்பித்து, கால்களில் வணங்கி, மலர்மாலைகள் அணிவித்து, இனிய சொல் சொல்லி, உபசாரம் செய்வதில்லையா? அப்பொழுது அக்கார்யங்களால் அந்தந்த அங்கங்கள் மூலமாக அந்த பெரியாரையே ஆராதித்ததாக ஆகிறதல்லவா? அப்படியே மரத்தின் வேரில் விட்டஜலம் வேருக்கு மாத்திரமா பிரயோஜனம்? பூரா மரமும் குளிர்ந்து செழிப்பதில்லையா? அப்படியே இதர தேவதைகளை கர்மாக்களால் ஆராதனை செய்வதும் இந்த தேவதைகளெல்லா ரையும் தன் அங்கமாய்க்கொண்ட ஸர்வ தேவதாஸ்வரூபியான பகவானுடைய ஆராதனையேயாகும். ஆனால் ஜனங்கள் இவ்விதம் தெரிந்து கொள்ளாமல் அந்தந்த தேவதைகளை மாத்திரம் ஆராதிப்பதாக நினைத்துக்கொண்டு விடுவதால், பகவானு டைய ஆராதனைக்கு ஏற்பட்ட முக்கிய பலனையடைவதில்லை.

## मूलसंतर्पणेन

### மூலஸந்தர்பணேன

வேரில் ஜலம் விட்டால் எப்படி மரத்திலுள்ள துளிர், இலை, பூ, காய், பழம் எல்லாம் செழிப்படைகின்றனவோ, அப்படியே எல்லா தேவதைகளுக்கும் வேராயிரு க்கிற பகவானை உத்தேசித்து பிரஹ்மார்ப்பணம் செய்துவிட்டால், அவருடைய அங்கங்களாகிய மற்ற தேவதைகளும் திருப்தியடைந்து விடுவார்கள். துளிர் முதலி யவைகளில் ஜலம் விடுவது எப்படி வேண்டியதேயில்லையோ, அப்படியே பகவானை ஆராதிப்பவர்களுக்கு மற்ற தேவதைகளை தனித்து ஆராதனை செய்ய அவசியமில்லை யென்ற தாத்பர்யமும் கிடைக்கிறது.

**(86)**

இவ்விதமாக ஸர்வ தேவதா ஸ்வரூபியாகிய பகவானுடைய தத்வத்தை யறியாமல் கர்மரக்களைச் செய்கிறவர்களுக்கு பலன் அல்பமாய்த்தானிருக்கும். அந்தப்பலன் அனுபவித்து தீர்ந்தவுடன் மறுபடியும் துக்கம்தான். வேதாத்யயன ஸம்பன்னர்களாய் வைதீக கர்மானுஷ்டான நிரதர்களாய் இருந்தாலும், அவர்களும் ஸ்வர்க்கம் முதலிய மேல்லோகங்களுக்குப் போய் விட்டு கர்மபலன் முடிந்தவுடன் திரும்பி இங்கே பூலோகத்திற்கு வரவேண்டியதுதான்.

**त्रैविद्या माँ सोमपाः पूतपापा यज्ञैरिष्ट्वा स्वर्गतिं प्रार्थयन्ते।**
**ते पुण्यमासाद्य सुरेन्द्रलोक मश्नन्ति दिव्यान्दिवि देवभोगान् ॥** IX 20

**த்ரைவித்3யா மாம் ஸோமபாः பூதபாபா யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்க3திம் ப்ரார்த2யந்தே।**
**தே புண்யமாஸாத்3ய ஸுரேந்த்3ரலோக மஶ்னந்தி தி3வ்யாந்தி3வி தே3வபோ4கா3ன் ॥**

**ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।**
**एवं त्रयीधर्ममनुप्रपन्ना गतागतं कामकामा लभन्ते ॥** IX 21

**தே தம் பு4க்த்வா ஸ்வர்க3லோகம் விஶாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி ।**
**ஏவம் த்ரயீத4ர்மமனுப்ரபன்னா க3தாக3தம் காமகாமா லப4ந்தே ॥**

**आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥** VIII 16

**ஆப்3ரஹ்மபு4வனால்லோகாः புனராவர்தினோ(அ)ர்ஜுன ।**
**மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்3யதே ॥**

என்ற இந்த கீதா சுலோகங்களின் கருத்துக்களை அடுத்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் சொல்கிறுர்.

**यः प्रैत्यात्मानभिज्ञः श्रुतिविदपि तथाकर्मकृत्कर्मणोऽस्य**
**नाशः स्यादल्पभोगात्पुनरवतरणे दुःखभोगो महीयान् ।**
**आत्माभिज्ञस्य लिप्सोरपि भवति महाञ्शाश्वतः सिद्धिभोगो**
**ह्यात्मा तस्मादुपास्यः खलु तदधिगमे सर्वसौख्यान्यलिप्सोः ॥ ८६ ॥**

**யः ப்ரைத்யாத்மானபி4ஜ்ஞः ஶ்ருதிவித3பி ததா2கர்மக்ருத்கர்மணோ(அ)ஸ்ய**
**நாஶः ஸ்யாத3ல்பபோ4கா3த்புனரவதரணே து3ःக2போ4கோ3 மஹீயான் ।**
**ஆத்மாபி4ஜ்ஞஸ்ய லிப்ஸோரபி ப4வதி மஹாஞ்ஶாஶ்வதः ஸித்3தி4போ4கோ3**
**ஹ்யாத்மா தஸ்மாது3பாஸ்யः க2லு தத3தி4க3மே ஸர்வஸௌக்2யான்யலிப்ஸோः ॥ 86 ॥**

श्रुतिवित् = வேதன் - (அத்யயனத்துடன் அர்த்தம்) அறிந்தவனுகவும்,
ஶ்ருதிவித்

तथा-कर्म-कृत् = அதில் சொல்லியபடி - கர்மாக்களை - அனுஷ்டிக்கிறவனுகவும்,
ததா2-கர்ம-க்ருத்

अपि = இருந்தாலுங்கூட,
அபி

यः = எவன்,
யஃ

आत्म-अनभिज्ञः = ஆத்ம தத்வத்தை - அறியாதவனுக,
ஆத்ம-அனபி4ஜ்ஞஃ

प्रैति = இறந்தபோகிறுனே,
ப்ரைதி

अस्यः = இவனுடைய,
அஸ்யஃ

कर्मणः = கர்மாவிற்கு,
கர்மணஃ

अल्प भोगात् = கொஞ்சம் - போகத்திருல்,
அல்ப போ4கா3த்

नाशः = நாசமானது,
நாஶஃ

स्यात् = ஏற்பட்டுவிடும்,
ஸ்யாத்

पुनः = மறுபடியும்,
புனஃ

अवतरणे = கீழே இறங்கும்போது,
அவதரணே

यहीयान् = மிகவும் அதிகமான,
யஹீயான்

दुःखभोगः = துக்கத்தின் - அனுபவம் (உண்டு),
து3ஃக2போ4க3ஃ

आत्म-अभिज्ञस्य = ஆத்ம தத்வத்தை - அறிந்தவனுக்கு,
ஆத்ம-அபி4ஜ்ஞஸ்ய

लिप्सोः अपि = ஏதேனும் அடைய வேண்டுமென்ற ஆசையுள்ளவனுயிருந்தாலுங்கூட,
லிப்ஸோஃ அபி

महान् = பெரியதாய்,
மஹான்

| | | |
|---|---|---|
| **शाश्वतः** | = | நீடித்ததாயுள்ள, |
| **ஶாஶ்வத:** | | |
| **सिद्धि-भोगः** | = | (அணிமாதி) ஸித்திகளுடன் - போகமானது, |
| **ஸித்[3]தி[4]-போ[4]க[3]:** | | |
| **भवति** | = | ஏற்படும், |
| **ப[4]வதி** | | |
| **तस्मात्** | = | ஆகையினால், |
| **தஸ்மாத்** | | |
| **आत्मा हि** | = | ஆத்மாவல்லவா, |
| **ஆத்மா ஹி** | | |
| **उपास्यः** | = | உபாஸிக்க வேண்டியவர்? |
| **உபாஸ்ய:** | | |
| **अलिप्सोः** | = | ஆசையற்றவருக்கு, |
| **அலிப்ஸோ:** | | |
| **तत्-अधिगमे** | = | அந்த ஆத்மாவைப்பற்றி - ஸாக்ஷாத்தாக |
| **தத்-அதி[4]க[3]மே** | | அறிவு ஏற்படும்போது, |
| **सर्व-सौख्यान्यानि** | = | எல்லா - ஸௌக்யங்களும், |
| **ஸர்வ-ஸௌக்[2]யான்யானி** | | |
| **खलु** | = | இருக்கமல்லவா? |
| **க[2]லு** | | |

இந்த சுலோகத்திற்கு மூல சுருதி பிரஹதாரண்யக உபநிஷத்தில்

**तदेतद्ब्रह्म क्षत्रं विट् शूद्रस्तदग्निनैव देवेषु ब्रह्माभवद्ब्राह्मणो मनुष्येषु क्षत्रियेण क्षत्रियो वैश्येन वैश्यः शूद्रेण शूद्रस्तस्मादग्नावेव देवेषु लोकमिच्छन्ते ब्राह्मणे मनुष्येष्वेताभ्या हि रूपाभ्यां ब्रह्माभवत्। अथ यो ह वा अस्माल्लोकात्स्वं लोकमदृष्ट्वा प्रैति स एनमविदितो न भुनक्ति यथा वेदो वाऽननूक्तोऽन्यद्वा कर्माकृतं यदि ह वा अप्यनेवंविन्महत्पुण्यं कर्म करोति तद्धास्यान्ततः क्षीयत एवात्मानमेव लोकमुपासीत स य आत्मानमेव लोकमुपास्ते न हास्य कर्म क्षीयते। अस्माद्ध्येवात्मनो यद्यत्कामयते तत्तत्सृजते ॥** I 4 (15)

**ததே[3]தத்[3]ப்[3]ரஹ்ம க்ஷத்ரம் விட் ஶூத்[3]ரஸ்தத[3]க்[3]னினைவ தே[3]வேஷு ப்[3]ரஹ்மாப[4]வத்[3]ப்[3]ராஹ்மணோ மனுஷ்யேஷு க்ஷத்ரியேண க்ஷத்ரியோ வைஶ்யேன வைஶ்ய: ஶூத்[3]ரேண ஶூத்[3]ரஸ்தஸ்மாத[3]க்[3]னாவேவ தே[3]வேஷு லோகமிச்ச[2]ந்தே ப்[3]ராஹ்மணே மனுஷ்யேஷ்வேதாப்[4]யா ஹி ரூபாப்[4]யாம் ப்[3]ரஹ்மாப[4]வத்। அத[2] யோ ஹ வா அஸ்மால்லோகாத்ஸ்வம் லோகமத்[3]ருஷ்ட்வா ப்ரைதி ஸ ஏனமவிதி[3]தோ ந பு[4]னக்தி யதா[2] வேதோ[3] வா(அ)னனூக்தோ(அ)ன்யத்[3]வா கர்மாக்ருதம் யதி[3] ஹ வா அப்யனேவம்வின்மஹத்புண்யம் கர்ம கரோதி தத்[3]தா[4]ஸ்யாந்தத: க்ஷீயத ஏவாத்மானமேவ லோகமுபாஸீத ஸ ய**

**ஆத்மானமேவ லோகமுபாஸ்தே ந ஹாஸ்ய கர்ம க்ஷீயதே। அஸ்மாத்³ த்⁴யேவாத்மனோ யத்³யத்காமயதே தத்தத்ஸ்ருஜதே ॥**

**महान् शाश्वतः**

**மஹான் ஶாஶ்வத꞉**

கொஞ்சமேனும் ஆத்ம விஷயமான அறிவில்லாமல் கர்மாவையே செய்கிற வனுடைய போகத்தைவிட பெரிது சாசுவதம் என்று மாத்திரந்தான் அர்த்தம்.

**सर्वसौख्यानि**

**ஸர்வஸௌக்²யானி**

ஆத்மஞானி அனுபவிக்கும் பிரஹ்மானந்தம் பெரிய ஸமுத்திரம் போன்றது. உலகிலுள்ள விஷயானந்தமெல்லாம் அதிலுள்ள சிறிய திவிலை போன்றது. ஸமுத்தி ரத்தில் நீர்த் திவிலைகள் அடங்கியுள்ளதுபோல் பிரஹ்மானந்தத்தில் எல்லா விஷயா னந்தங்களும் அடங்கியுள்ளது என்ற கருத்தில் தான் ஆத்மஞானி எல்லா ஸுகங்க ளையும் அனுபவிக்கிறுன் என்று கூறப்படுகிறது.

ஆசைப்படாதவனைப்பற்றி பிரஹதாரண்யகத்திலேயே

**अथ अकामयमानः योऽकामः निष्कामः आप्तकामः आत्मकामः ॥** IV 4 (6)

**அத² அகாமயமான꞉ யோ(அ)காம꞉ நிஷ்காம꞉ ஆப்தகாம꞉ ஆத்மகாம꞉ ॥**

“ஆசைப்படாதவன்; எவன் காமம் (ஆசை) இல்லாதவனோ, காமம் விலகின வனோ? காமம் அடைந்தவனோ ஆத்மாவிலேயே காமம் உள்ளவனோ"

என்ற வரக்கியத்தின்படி இனி அடையவேண்டிய ஸுகம் கிடையாதென்று தான் தாத்பர்யம்.

**(87)**

முன் 78 வது சுலோகத்தில் ஆத்மா ஸ்வயம் ஜ்யோதிஸ் ஸ்வரூபராயிருப் பதினுல்தான் ஸ்வப்ன ஸமயத்தில் ஸூர்யன் முதலான பிரகாசமில்லாமல் போனுலும் தன்னுடைய பிரகாசத்தினுலேயே அங்கு தோன்றும் பதார்த்தங்களை அறிகிறுரென்று சொல்லப்பட்டது. ஜாக்கிரத் காலத்திலுங்கூட அறிவு ஏற்படுவது ஆத்மாவினுடைய பிரகாசத்தினுலேயே தவிர ஸூர்யாதி பிரகரசத்தினுல், ஆத்மா ஜ்யோதிஸ் ஸ்வரூபமில்லாதபோனுல் ஸூர்யாதிகளும் பிரகாசிக்காது, என்று சொல்கிறுர்.

**सूर्याद्यैरर्थभानं न हि भवति पुनः केवलैर्नात्र चित्रं**
**सूर्यात्सूर्यप्रतीतिर्न भवति सहसा नापि चन्द्रस्य चन्द्रात् ।**
**अग्नेरग्नेश्च किं तु स्फुरति रविमुखं चक्षुषश्चित्प्रयुक्ता -**
**दात्मज्योतिस्ततोऽयं पुरुष इह महो देवतानां च चित्रम् ॥ ८७ ॥**

**ஸூர்யாத்3யைரர்த2பா4னம் ந ஹி ப4வதி புன: கேவலைர்னாத்ர சித்ரம்**
**ஸூர்யாத்ஸூர்யப்ரதீதிர்ன ப4வதி ஸஹஸா நாபி சந்த்3ரஸ்ய சந்த்3ராத் ।**
**அக்3னேரக்3னேஶ்ச கிம் து ஸ்பு2ரதி ரவிமுக2ம் சக்ஷுஷஶ்சித்ப்ரயுக்தா -**
**தா3த்மஜ்யோதிஸ்ததோ(அ)யம் புருஷ இஹ மஹோ தே3வதானாம் ச சித்ரம்**
**॥ 87 ॥**

**केवलै** = தனித்திருக்கும்,
**கேவலை**

**सूर्याद्यैः** = ஸூர்யன் முதலானவைகளால்,
**ஸூர்யாத்3யை:**

**अर्थ-भानं** = பதார்த்தங்களின் - தோற்றம்,
**அர்த2-பா4னம்**

**न भवति** = ஏற்படுவதில்லையென்பது பிரஸித்தம்,
**ந ப4வதி**

**अत्र** = இவ்விஷயத்தில்,
**அத்ர**

**चित्रं** = ஆச்சர்யம் ஒன்றும்,
**சித்ரம்**

**न** = இல்லை,
**ந**

**सूर्यात्** = ஸூர்யனிருப்பதினால் மாத்திரம்,
**ஸூர்யாத்**

**सूर्य-प्रतीति** = ஸூர்யனுடைய - தோற்றம்,
**ஸூர்ய-ப்ரதீதி**

**सहसा** = உடனே,
**ஸஹஸா**

**न भवति** = ஏற்படுவதில்லை,
**ந ப4வதி**

**चन्द्रात्** = சந்திரனால்,
**சந்த்3ராத்**

**चन्द्रस्य अपि** = சந்திரனுடைய தோற்றமும்,
**சந்த்3ரஸ்ய அபி**

| | | |
|---|---|---|
| **अग्ने:**<br>**அக்³னே:** | = | அக்னியினுல், |
| **अग्ने: च**<br>**அக்³னே꞉ ச** | = | அக்னியினுடைய தோற்றமும், |
| **न**<br>**ந** | = | ஏற்படுவதில்லை, |
| **किं तु**<br>**கிம் து** | = | ஆனுல், |
| **चित् प्रयुक्तात्**<br>**சித் ப்ரயுக்தாத்** | = | சைதன்யத்தினுல் - ஏவப்பட்ட, |
| **चक्षुष:**<br>**சக்ஷுஷ:** | = | கண்களினுல்தான், |
| **रविमुखं**<br>**ரவிமுக²ம்** | = | ஸூர்யன் - முதலானவை, |
| **स्फुरति**<br>**ஸ்பு²ரதி** | = | பிரகாசிக்கின்றன, |
| **तत:**<br>**தத꞉** | = | ஆகையினுல், |
| **अयं**<br>**அயம்** | = | இந்த, |
| **पुरुष:**<br>**புருஷ:** | = | புருஷன், |
| **आत्म-ज्योति:**<br>**ஆத்ம-ஜ்யோதி꞉** | = | ஸ்வயம் - பிரகாசமாயுள்ளவர், |
| **इह**<br>**இஹ** | = | இங்கு, |
| **देवतानां**<br>**தே³வதானும்** | = | தேவதைகளுக்கெல்லாம் (இந்திரியங்களுக்கெல் லாம்), |
| **मह: च**<br>**மஹ꞉ ச** | = | (அது) ஜ்யோதிஸ்ஸாக இருப்பது தான், |
| **चित्रं**<br>**சித்ரம்** | = | ஆச்சர்யம்!. |

உலகத்தில் சாதாரணமாக பதார்த்தங்களைப் பார்க்கவேண்டுமானுல் ஸூர்யன். சந்திரன் அல்லது அக்னி இவைகளின் பிரகாசத்தைக்கொண்டே பார்ப்பதாகத் தோன்றுகிறது. ஆனுல் அவைகள் மாத்திரம் இருந்தால் பதார்த்தம் தோன்றுவதில்லை என்பது தூக்கத்திலும், குருடன் விஷயத்திலும் அனுபவத்தினுல் நன்கு தெரிகிறது. நல்ல பார்வையுடைய கண் இருந்தால்தான் பதார்த்தம் தெரியும், ஸூர்யாதிகள்

இருப்பதும் அதனுல்தான் தெரியும். மேலும் கண்மாத்திரம் திறந்திருந்து, ஆத்மா மனஸை வேறிடத்தில் வைத்திருந்தால் அப்பொழுதும் பதார்த்தம் தென்படுவதில்லை. ஆகையால் ஆத்ம ஜ்யோதிஸ் கண் மூலமாய் வெளியில் வந்தால்தான் பதார்த்தம் தெரியும். இதிலிருந்து எல்லா பதார்த்தங்களேயும் அவைகளேத் தோன்ற உதவும் ஸூர்யாதிகளேயும் வாஸ்தவமாய் பார்ப்பது ஸ்வயம் ஜ்யோதிஸ்ஸான ஆத்மா தான்.

தவிரவும், ஸூர்யாதிகள் ரூபத்தை மாத்திரம் பிரகாசிக்கச் செய்யும். கந்தம் தெரியவேண்டுமானுல் பிருதிவீ, ரஸம் தெரிய வேண்டுமானுல் வருணன், ஸ்பர்சம், தெரியவேண்டுமானுல் வாயு இப்படியே ஒவ்வொரு தேவதையும் அதற்கு ஸம்பந்தப் பட்ட இந்திரியங்கள் மூலமாக அறிவை ஏற்படுத்த உதவுகின்றன. தனக்கு ஸம்பந்தப் படாத இந்திரியங்கள் மூலமாக ஏற்படும் அறிவை உண்டுபண்ண அவைகளுக்கு சக்தி கிடையாது. ஆத்மாவோ சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் எல்லா வற்றையும் அறிந்துகொள்ள சக்திவாய்ந்தது. மனஸினுல் கல்பிககும் பதார்த்தங்க ளேயும் அறியக்கூடிய தன்மையுள்ளது. ஆகையால் ஆத்மாவினுடைய பிரகாசப்படுத் தும் சக்தி மிகவும் ஆச்சர்யமே என்று தாத்பர்யம்.

இந்த சுலோகத்திற்கு மூலசுருதி ஸாமவேத ஆரண்யகத்தில் இருக்கிறது. அதையே ஸூர்ய - உபஸ்தான மந்திரத்தில் சேர்த்து சொல்லப்பட்டு வருகிறது.

**चित्रं देवानामुदगादनीकं चक्षुर्मित्रस्य वरुणस्याग्नेः ।**

**आप्रा द्यावापृथिवी अन्तरिक्षँ सूर्य आत्मा जगतस्तस्थुषश्च ॥** V 3.

**சித்ரம் தே³வாநாமுத³கா³த³நீகம் சக்ஷுர்மித்ரஸ்ய வருணஸ்யாக்³னே: ।**
**ஆப்ரா த்³யாவாப்ருதி²வீ அந்தரிக்ஷஂ ஸூர்ய ஆத்மா ஜக³தஸ்தஸ்து²ஷஶ்ச ॥**

"தேவர்களுடைய ஸைன்யம் (இந்திரியங்களுடைய ஸமூஹம்) ஆச்சர்யமாய் வெளிக்கிளம்புகிறது. மித்திரனேயும், வருணனேயும், அக்னியையும், தெரியும்படிச் செய்துகொண்டு, ஆகாசம், பூமி, அந்தரிக்ஷம் எல்லாவற்றையும் நிரப்பிக்கொண்டு, சலனமுள்ளதும், சலனமற்றதுமான யாவற்றையும் (ஸூர்யன் போல்) பிரகாசப்படு த்திக்கொண்டு ஆத்மர (இருந்து வருகிறார்)"

**(88)**

ஆத்மா இந்திரியங்களுக்கு மாத்திரம் பிரேரகர் என்பதில்லை, பிராணனே பிரேரனை செய்வதும் அவர்தான் என்று இரண்டு சுலோகங்களால் எடுத்துக்காட்டுகிறுர். முதல் சுலோகத்தில் பிராணன் செய்யும கார்யங்களேச் சொல்கிறுர்.

**प्राणेनाम्भांसि भूयः पिबति पुनरसावन्नमश्नाति तत्र**
**तत्पाकं जाठरोऽग्निस्तदुपहितबलो द्राक्छनैर्वा करोति ।**
**व्यानः सर्वाङ्गनाडीष्वथ नयति रसं प्राणसन्तर्पणार्थं**
**निःसारं पूतिगन्धं त्यजति बहिरयं देहतोऽपानसञ्ज्ञः ॥ ८८ ॥**

**ப்ராணேனும்பா⁴ம்ஸி பூ⁴ய: பிப³தி புனரஸாவந்நமஶ்ஞாதி தத்ர**
**தத்பாகம் ஜாட²ரோ(அ)க்³நிஸ்தது³பஹிதப³லோ த்³ராக்ச²னைர்வா கரோதி ।**
**வ்யான: ஸர்வாங்க³நாடீ³ஷ்வத² நயதி ரஸம் ப்ராணஸந்தர்பணார்த²ம்**
**நி:ஸாரம் பூதிக³ந்த⁴ம் த்யஜதி ப³ஹிரயம் தே³ஹதோ(அ)பானஸன்ஜ்ஞ: ॥ 88 ॥**

**प्राणेन** = பிராணனைக்கொண்டு,
**ப்ராணேன**
**भूयः** = நிரம்ப,
**பூ⁴ய:**
**अम्भांसि** = ஜலத்தை,
**அம்பா⁴ம்ஸி**
**पिबति** = (ஆத்மா) குடிக்கிறார்,
**பிப³தி**
**पुनः** = அப்படியே,
**புன:**
**असौ** = அவர்,
**அஸௌ**
**अन्नं** = அன்னத்தை,
**அந்நம்**
**अश्नाति** = சாப்பிடுகிறார்,
**அஶ்ஞாதி**
**तत्र** = அங்கே,
**தத்ர**
**तत् पाकं** = அதன் - பாகத்தை,
**தத் பாகம்**
**तत्-उपहित-बलः** = பிராணனால் - கொடுக்கப்பட்ட - சக்தியுடன் கூடிய,
**தத்-உபஹித-ப³ல:**
**जाठर** = வயிற்றிலுள்ள,
**ஜாட²ர**
**अग्निः** = அக்னியானது,
**அக்³னி:**

| | | |
|---|---|---|
| द्राक्<br>த்³ராக் | = | உடனேயோ, |
| शनैः वा<br>ஶனை: வா | = | மெள்ளமெள்ளவோ, |
| करोति<br>கரோதி | = | செய்கிறது, |
| अथ<br>அத² | = | அதன் பிறகு, |
| प्राण-सन्तर्पणार्थं<br>ப்ராண-ஸந்தர்பணார்த²ம் | = | பிராணன்களுடைய (இந்திரியங்களுடைய) - திருப்தியை (போஷணத்தை) உத்தேசித்து, |
| सर्व-अङ्ग-नाडीषु<br>ஸர்வ-அங்க³-நாடீ³ஷு | = | எல்லா, சரீரத்திலுள்ள - நாடிகள் வழியாக, |
| रसं<br>ரஸம் | = | (ஜலம் அன்னம் இவைகளின்) ஸாரத்தை, |
| व्यानः<br>வ்யானः | = | வியானன், |
| नयति<br>நயதி | = | கொண்டுபோகிறது, |
| निःसारं<br>நிःஸாரம் | = | ஸாரமற்றதாய், |
| पूतिगन्धं<br>பூதிக³ந்த⁴ம் | = | அழுகின நாற்றமுள்ள அம்சத்தை, |
| अयं<br>அயம் | = | இந்த, |
| अपान-सन्ज्ञः<br>அபான-ஸன்ஜ்ஞः | = | அபானன் என்ற பெயருடையது, |
| देहतः<br>தே³ஹதः | = | தேஹத்திலிருந்து, |
| बहिः<br>ப³ஹி: | = | வெளியிலே, |
| त्यजति<br>த்யஜதி | = | எறிந்துவிடுகிறது. |

**(89)**

இவ்விதம் வேலை செய்கிற பிராணன் எதனுடைய இருப்பினுல் வேலை செய் கிறதோ, அதுவே ஆத்மா என்கிறுர் பிராணனுக்கு சக்தியைக் கொடுப்பதால்

பிராணனுக்கு பிராணன் என்றும், கண்ணுக்கு பார்க்கும் சக்தியைக் கொடுப்பதால் கண்ணுக்குக் கண் என்றும், அப்படியே காதுக்குக் காது, மனஸிற்கு மனஸ் என்றெல்லாம் சொல்லலா மென்று கேனோபநிஷத்தில் உள்ள

**श्रोत्रस्य श्रोत्रं मनसो मनो यत्। वाचो ह वाचं स उ प्राणस्य प्राणः।**
**चक्षुषश्चक्षुरतिमुच्य धीराः। प्रेत्यास्माल्लोकादमृता भवन्ति॥**

**ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மனஸோ மனோ யத்। வாசோ ஹ வாசம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராணः।**
**சக்ஷுஷஶ்சக்ஷுரதிமுச்ய தீ⁴ராः। ப்ரேத்யாஸ்மால்லோகாத³ம்ருதா ப⁴வந்தி ॥**

என்ற வாக்கியத்தையனுஸரித்து இங்கே சொல்கிறார்,

**व्यापारं देहसंस्थः प्रतिवपुरखिलं पञ्चवृत्त्यात्मकोऽसौ**
**प्राणः सर्वेन्द्रियाणामधिपतिरनिशं सत्तया निर्विवादम्।**
**यस्येत्थं चिद्घनस्य स्फुटमिह कुरुते सोऽस्मि सर्वस्य साक्षी**
**प्राणस्य प्राण एषोऽप्यखिलतनुभृतां चक्षुषश्चक्षुरेषः॥ ८९॥**

**வ்யாபாரம் தே³ஹஸம்ஸ்த²ः ப்ரதிவபுரகி²லம் பஞ்சவ்ருத்த்யாத்மகோ(அ)ஸௌ**
**ப்ராணः ஸர்வேந்த்³ரியாணாமதி⁴பதிரநிஶம் ஸத்தயா நிர்விவாத³ம் ।**
**யஸ்யேத்த²ம் சித்³க⁴னஸ்ய ஸ்பு²டமிஹ குருதே ஸோ(அ)ஸ்மி ஸர்வஸ்ய ஸாக்ஷீ**
**ப்ராணஸ்ய ப்ராண ஏஷோ(அ)ப்யகி²லதனுப்⁴ருதாம் சக்ஷுஷஶ்சக்ஷுரேஷः ॥ 89 ॥**

| | | |
|---|---|---|
| **पञ्च-वृत्ति-आत्मकः** **பஞ்ச-வ்ருத்தி-ஆத்மகः** | = | (பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்கிற) ஐந்து விருத்திகளின் ஸ்வரூபமாய், |
| **सर्व इन्द्रियाणां** **ஸர்வ இந்த்³ரியாணும்** | = | எல்லா இந்திரியங்களுக்கும், |
| **अधिपति** **அதி⁴பதி** | = | யஜமானனாக, |
| **प्रतिवपुः** **ப்ரதிவபுः** | = | ஒவ்வொரு சரீரத்திலும், |
| **देह-संस्थः** **தே³ஹ-ஸம்ஸ்த²ः** | = | சரீரத்திலேயே இருந்துகொண்டிருக்கும், |
| **असौ** **அஸௌ** | = | இந்த, |
| **प्राणः** **ப்ராணः** | = | பிராணன், |

| | | |
|---|---|---|
| **यस्य**<br>**யஸ்ய** | = | எந்த, |
| **चित्-धनस्य**<br>**சித்-த4னஸ்ய** | = | சைதன்யமே ஸ்வரூபமாயுள்ள ஆத்மாவினுடைய, |
| **सत्तया**<br>**ஸத்தயா** | = | இருப்பினுல், |
| **अनिशं**<br>**அநிஶம்** | = | எப்பொழுதும், |
| **निर्विवादं**<br>**நிர்விவாத3ம்** | = | தடையன்னியில், |
| **स्फुटं**<br>**ஸ்பு2டம்** | = | நன்ருக, |
| **इह**<br>**இஹ** | = | இங்கே, |
| **अखिलं**<br>**அகி2லம்** | = | எல்லா, |
| **व्यापारं**<br>**வ்யாபாரம்** | = | வியாபாரத்தையும், |
| **इत्थं**<br>**இத்த2ம்** | = | இவ்விதம், |
| **कुरुते**<br>**குருதே** | = | செய்கிறதோ, |
| **सः**<br>**ஸஃ** | = | அந்த, |
| **सर्वस्य**<br>**ஸர்வஸ்ய** | = | எல்லாவற்றிற்கும், |
| **साक्षी**<br>**ஸாக்ஷீ** | = | ஸாக்ஷியாக, |
| **अस्मि**<br>**அஸ்மி** | = | இருக்கிறேன், |
| **एषः**<br>**ஏஷஃ** | = | இவர், |
| **अखिल-तनुभृतां**<br>**அகி2ல-தனுப்4ருதாம்** | = | எல்லா - பிராணிகளுக்கும், |
| **अपि**<br>**அபி** | = | கூட, |

| | | |
|---|---|---|
| **प्राणस्य**<br>**ப்ராணஸ்ய** | = | பிராணனுக்கு, |
| **प्राण:**<br>**ப்ராண:** | = | பிராணன், |
| **एष:**<br>**ஏஷ:** | = | இவர், |
| **चक्षुष:**<br>**சக்ஷுஷ:** | = | கண்ணுக்கு, |
| **चक्षु:**<br>**சக்ஷு:** | = | கண். |

பிரதிசரீரம் தனித்தனியாக எடுத்துக்கொண்டால் அந்த சைதன்யம் பிரத்யகாத்மா எனப்படும். ஸமஷ்டியாக ஜகத் பூராவையும் எடுத்துக்கொண்டால அதே சைதன்யம் அந்தர்யாமீ எனப்படும். வியஷ்டி ஸமஷ்டியென்ற பேதம் உபாதி பேதத்திஞல் ஏற்படுகிறதைத் தவிர ஸ்வரூபத்தில் சைதன்யம் ஒன்றேதான்.

**(90)**

முன் 56, 57 சுலோகங்களில் ஸத்யத்திற்கு ஸத்யம் என்றும், இங்கே பிராணனுக்கு பிராணன், கண்ணுக்கு கண், என்றும் சொன்னது போலவே, ஆத்மா ஜ்யோதிஸ்களுக்கும் ஜ்யோதிஸ் என்று ஒருவாறு 87 வது சுலோகத்தில் சொன்னதை இன்னும விஸ்தரித்துக்காட்டி, மற்ற ஜ்யோதிஸ்களுக்கு ஆத்மாவைப் பிரகாசப்படுத்திக்காட்ட அவசியமுமில்ஜலயென்றும் சக்தியும் கிடையாதென்றும் விளக்குகிறுர். முண்டகோபநிஷத்தில் காணும்

**हिरण्मये परे कोशे विरजं ब्रह्म निष्कलम्।**
**तत् शुभ्रं ज्योतिषां ज्योतिः तत् यत् आत्मविदो विदुः ॥** II 2 (10)

**ஹிரண்மயே பரே கோஶே விரஜம் ப்³ரஹ்ம நிஷ்கலம்।**
**தத் ஶுப்⁴ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிঃ தத் யத் ஆத்மவிதோ³ விது³ঃ ॥**

என்ற வாக்கியத்தையும், முண்டகோபநிஷத்தில் II 2 (11), காடகோபநிஷத் V 15 ஆக இரண்டு இடத்திலும் காணும்

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः।**
**तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥**

**ந தத்ர ஸூர்யோ பா⁴தி ந சந்த்³ரதாரகம் நேமா வித்³யுதோ பா⁴ந்தி குதோ(அ)யமக்³னிঃ।**
**தமேவ பா⁴ந்தமனுபா⁴தி ஸர்வம் தஸ்ய பா⁴ஸா ஸர்வமித³ம் விபா⁴தி ॥**

என்ற வாக்கியத்தையும், பகவத்கீதையிலுள்ள

**यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम्।**
**यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥** XV 12

**யதா3தி3த்யக3தம் தேஜோ ஜக3த்3பா4ஸயதே(அ)கி2லம்।**
**யச்சந்த்3ரமஸி யச்சாக்3னௌ தத்தேஜோ வித்3தி4 மாமகம் ॥**

**न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः।**
**यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥** XV 6

**ந தத்3பா4ஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவகஃ।**
**யத்3க3த்வா ந நிவர்தந்தே தத்3தா4ம பரமம் மம ॥**

என்ற வாக்கியங்களையும், ஸங்கிரஹித்து அடுத்த சுலோகத்தில் சொல்கிறுர்.

**यं भान्तं चिद्घनैकं क्षितिजलपवनादित्यचन्द्रादयो ये**
**भासा तस्यैव चानु प्रविरलगतयो भान्ति तस्मिन्वसन्ति ।**
**विद्युत्पुञ्जोऽग्निसङ्घोऽप्युडुगणविततिर्भासयेत्किं परेशं**
**ज्योतिः शान्तं ह्यनन्तं कविमजममरं शाश्वतं जन्मशून्यम् ॥ ९० ॥**

**யம் பா4ந்தம் சித்3க4னைகம் க்ஷிதிஜலபவநாதி3த்யசந்த்3ராத3யோ யே**
**பா4ஸா தஸ்யைவ சானு ப்ரவிரலக3தயோ பா4ந்தி தஸ்மின்வஸந்தி ।**
**வித்3யுத்புஞ்ஜோ(அ)க்3நிஸங்கோ4(அ)ப்யுடு3க3ணவிததிர்பா4ஸயேத்கிம் பரேஶம்**
**ஜ்யோதிஃ ஶாந்தம் ஹ்யனந்தம் கவிமஜமமரம் ஶாஶ்வதம் ஜன்மஶூன்யம் ॥ 90 ॥**

| | | |
|---|---|---|
| **क्षिति-जल-पवन-आदित्य-चन्द्र-आदयः**<br>**க்ஷிதி-ஜல-பவன-ஆதி3த்ய-சந்த்3ர-ஆத3யஃ** | = | பூமி - ஜலம் - வாயு - ஸூர்யன் - சந்திரன் - முதலானவை, |
| **प्रविरल-गतयः**<br>**ப்ரவிரல-க3தயஃ** | = | தனித்தனி - போக்குள்ளவைகளாக இருந்து கொண்டிருக்கும், |
| **ये**<br>**யே** | = | எவைகளோ (அவைகள்), |
| **भान्तं**<br>**பா4ந்தம்** | = | பிரகாசித்துக் கொண்டிருக்கிற, |
| **चिद्घन-एकं**<br>**சித்3க4ன-ஏகம்** | = | சைதன்யஸ்வரூபராய் - ஒன்றுயிருக்கிற, |
| **य**<br>**யே** | = | எவரை, |

| | | |
|---|---|---|
| अनु<br>அனு | = | ஒட்டி, |
| तस्य<br>தஸ்ய | = | அவருடைய, |
| भासा एव च<br>பா⁴ஸா ஏவ ச | = | பிரகாசத்தினுலேயே, |
| भान्ति<br>பா⁴ந்தி | = | பிரகாசிக்கின்றனவோ, |
| तस्मिन्<br>தஸ்மின் | = | அவரிருப்பதினுலேயே, |
| वसन्ति<br>வஸந்தி | = | இருக்கின்றனவோ, |
| विद्युत्-पुञ्जः<br>வித்³யுத்-புஞ்ஜः | = | மின்னல் - கூட்டம், |
| अग्नि-सङ्घः<br>அக்³னி-ஸங்க⁴ः | = | அக்னி - ஸமூஹம், |
| ठडु-गण-विततिः<br>ட²டு³-க³ண-விததிः | = | நக்ஷத்திர - கூட்டங்களின் வரிசை, |
| अपि<br>அபி | = | இவையெல்லாமும், |
| ज्योतिः<br>ஜ்யோதிः | = | ஜ்யோதிஸ் ஸ்வரூபராய், |
| शान्तं<br>ஶாந்தம் | = | சாந்தராய், |
| अनन्तं<br>அனந்தம் | = | எல்லையற்றவராய், |
| कविं<br>கவிம் | = | ஞான ஸ்வரூபராய், |
| अजं<br>அஜம் | = | பிறக்காதவராய், |
| अमरं<br>அமரம் | = | சாவு அற்றவராய், |
| शाश्वतं<br>ஶாஶ்வதம் | = | எப்பொழுதும் இருப்பவராய், |
| जन्म-शून्यं<br>ஜன்ம-ஶூன்யம் | = | ஜன்மமே - கிடையாதவராய் இருக்கும், |

**परेशं** = மேலான ஆளுபவரை (பரமாத்மாவை),

**பரேஶம்**

**किं भासयेत् हि** = பிரகாசப்படுத்த முடியுமா?

**கிம் பா⁴ஸயேத் ஹி**

ஸாதாரணமாகவே ஒரு தீபம் பிரகாசிப்பதற்கு இன்னொரு தீபத்தின் பிரகாச த்தை அபேக்ஷிப்பது ஸாத்தியமுமில்லை, அவசியமும் இல்லை. அப்படியிருக்க தீபத்தின் பிரகாசம் கண்ணாடியில் விழுந்து அதற்குள் இந்த தீபத்தின் பிரகாசத்தைக் கொண்டு பிரகாசிக்கும் பிரதிபிம்ப தீபத்தின் பிரகாசத்தைக் கொண்டு வாஸ்தவமான தீபத்தை பிரகாசப்படுத்துவது எப்படி ஸாத்தியம்? அதற்கு அவசியந்தான் என்ன? அதே போல, உலகத்தில் மற்ற பதார்த்தங்களைக் தெரியும்படி செய்கிறதாகத் தோன்றுகிற ஸூர்யாதிகள்கூட எந்த ஆத்ம ஜ்யோதிஸ்ஸிலிருந்து பிரகாசத்தை இரவல் வாங்கிக் கொண்டு பிரகாசிக்கின்றனவோ, அவைகள் தங்களுக்கும் பிரகாச த்தை இரவல் கொடுத்த ஆத்மாவை எப்படி பிரகாசப்படுத்த முடியும்? என்று தாத்பர்யம்.

தவிரவும், இவைகளுடைய பிரகாசமோ, செய்கையோ, இருப்போ, எல்லாம் ஆத்மாவிற்கு உள்பட்டு பராதினமாயிருப்பதுடன், இவை யாவும் ஒரு காலத்தில் உண்டாகி, பலவித மாறுதல்களை அடைந்து, நாசத்தையடைய வேண்டியவைகள். ஆத்மாவோ நித்யர், ஸ்வயம், ஜ்யோதிஸ் ஸ்வரூபர்; அவருக்கு உத்பத்தியோ, மாறுதலோ, நாசமோ கிடையாது; சுத்த சைதன்ய ஸ்வரூபர். அவரே எல்லாவற்றை யும் அறிகிறவர்; இவைகள் எல்லாம் அறியப்படுபவைகள் அறியப்படும் பதார்த்தம் அறிகிறவனை அறிய முடியுமா?

இதே விஷயம் பிருஹதாரண்யக உபநிஷத்திலும்

**प्राणस्य प्राणमुत चक्शुषश्चक्शुरुत श्रोत्रस्य श्रोत्रं मनसो ये मनो विदुः ।**
**ते निचिक्युर्ब्रह्म पुराणमग्र्यम् ॥ १८ ॥** IV 4 (18)

**ப்ராணஸ்ய ப்ராணமுத சக்ஶுஷஶ்சக்ஶுருத ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரம் மனஸோ யே மனோ விது³: ।**
**தே நிசிக்யுர்ப்³ரஹ்ம புராணமக்³ர்யம் ॥ 18 ॥**

**एकधैवानुद्रष्टव्यमेतदप्रमयं ध्रुवम् ।**
**विरजः पर आकाशादज आत्मा महान्ध्रुवः॥ ॥ २०॥** IV 4 (20)

**ஏகதை⁴வானுத்³ரஷ்டவ்யமேதத³ப்ரமயம் த்⁴ருவம் ।**
**விரஜ: பர ஆகாஶாத³ஜ ஆத்மா மஹாந்த்⁴ருவ:॥ ॥ 20॥**

இதுவரை ஜகத்மித்யையென்றும், ஜீவன் ஸ்வரூபத்தில் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லையென்றும், அந்த பிரஹ்மம் ஒன்றுதான் வாஸ்தவமாக இருக்கிறது, அதுவே நித்யம், அதுவே ஞானஸ்வரூபம், அதுவே நிரதிசயமான ஆனந்த

ஸ்வரூபம், ஜகத்தில் எதெல்லாம் இருப்பதாயும், பிரகாசிப்பதாயும், ஸுகரூபமாயும் தோன்றுகிறதோ அவையெல்லாம் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை. அவையாவும் பிரஹ்ம தத்வத்தை அறியாத காரணத்திஞல் தோன்றுபவைகளே தவிர வாஸ்தவ மான பதார்த்தமல்லவென்றும் பலவிதமாய் ஆத்ம தக்வத்தை எடுத்துச் சொல்லி விட்டு, இனி அந்த ஆத்ம தத்வத்தை அறிந்து ஸாக்ஷாத்காரம் செய்திருக்கும் ஞானியின் அனுபவத்தை வர்ணிக்கவாரம்பிக்கிருர். அந்த ஞானி பிராரப்த கர்ம சேஷத்திஞல் சரீரம் இருந்துவரும் வரை ஜீவன் முக்தன் என்றும், பிராரப்தம் முடிந்து ஸகல உபாதிகளும் நிவிருத்தியான பிறகு விதேஹமுக்தன் என்றும், வியவஹரிக்கப்படுவான் என்பதை முன்னமேயே 42-வது சுலோகத்தில் சொல்லி யிருக்கிருர். இப்போது அவ்விருவர் நிலையையும் தனித்தனியே எடுத்துச் சொல்கிருர்.

**तद्ब्रह्मैवाहमस्मीत्यनुभव उदितो यस्य कस्यापि चेद्वै**
**पुंसः श्रीसद्गुरूणामतुलितकरुणापूर्णपीयूषदृष्ट्या ।**
**जीवन्मुक्तः स एव भ्रमविधुरमना निर्गतेऽनाद्युपाधौ**
**नित्यानन्दैकधाम प्रविशति परमं नष्टसन्देहवृत्तिः ॥ ९१ ॥**

**தத்³ப்³ரஹ்மைவாஹமஸ்மீத்யனுப⁴வ உதி³தோ யஸ்ய கஸ்யாபி சேத்³வை**
**பும்ஸः ஸ்ரீஸத்³கு³ரூணாமதுலிதகருணாபூர்ணபீயூஷத்³ருஷ்ட்யா ।**
**ஜீவன்முக்தः ஸ ஏவ ப்⁴ரமவிது⁴ரமனா நிர்க³தே(அ)நாத்³யுபாதௌ⁴**
**நித்யானந்தை³கதா⁴ம ப்ரவிஶதி பரமம் நஷ்டஸந்தே³ஹவ்ருத்திः ॥ 91 ॥**

**यस्य कस्य अपि** = யாராவது ஒரு,
**யஸ்ய கஸ்ய அபி**

**पुंसः** = மனிதனுக்கு,
**பும்ஸः**

**तत्** = அந்த,
**தத்**

**ब्रह्मैव** = பிரஹ்மமாகவே,
**ப்³ரஹ்மைவ**

**अहं** = நான்,
**அஹம்**

**अस्मि** = இருக்கிறேன்,
**அஸ்மி**

**इति** = என்று,
**இதி**

**अनुभवः** = அனுபவமானது,
**அனுப⁴வः**

| | | |
|---|---|---|
| **श्री-सद्गुरूणं**<br>**ஶ்ரீ-ஸத்³கு³ரூணம்** | = | மஹிமை பொருந்திய - ஸத்குருவினுடைய, |
| **अतुलित-करुणा-पूर्ण-पीयूष-दृष्ट्या**<br>**அதுலித-கருணா-பூர்ண-பீயூஷ-த்³ருஷ்ட்யா** | = | ஒப்பற்ற கருணை - நிறைந்த - அமிருதமயமான - கடாக்ஷத்தால், |
| **उदितः चेत् वै**<br>**உதி³த: சேத் வை** | = | ஏற்படுமேயானால், |
| **अम-विधुर-मनाः**<br>**அம-விது⁴ர-மனா:** | = | பிராந்தி - விலகிய - அந்தக்கரணத்தையுடைய, |
| **सः एव**<br>**ஸ: ஏவ** | = | அவன்தான், |
| **जीवन्मुक्तः**<br>**ஜீவன்முக்த:** | = | ஜீவன் முக்தன், |
| **अनादि-उपाधौ**<br>**அநாதி³-உபாதௌ⁴** | = | அநாதி காலம் தொட்டு வந்திருக்கும் உபாதி, |
| **निर्गते**<br>**நிர்க³தே** | = | போய்விட்டதேயானால், |
| **नष्ट-सन्देह-वृत्तिः**<br>**நஷ்ட-ஸந்தே³ஹ-வ்ருத்தி:** | = | எவ்வித ஸந்தேஹ விருத்தியும் நாசத்தையடைந்தவராக, |
| **परमं**<br>**பரமம்** | = | உத்தமமான, |
| **नित्य-आनन्द-एक-धाम**<br>**நித்ய-ஆனந்த³-ஏக-தா⁴ம** | = | நித்யமான - ஆனந்தத்திற்கு - ஒரே - இருப்பிடத்தை (மோக்ஷத்தை), |
| **प्रविशति**<br>**ப்ரவிஶதி** | = | நுழைந்து விடுகிறார் (திரும்பி வருவதில்லாத நிலையை அடைகிறார்). |

**दृष्ट्या**

**த்³ருஷ்ட்யா**

குருநாதருடைய கருணைகடாக்ஷத்தால் என்று மேலே அர்த்தம் சொல்லப் பட்டது. அவருடைய பரம கருணையால் கிடைத்த உபதேசத்தை சிரத்தையுடன் கிரஹித்து சிரவண மனன நிதித்யாஸனதிகள் செய்து ஆத்ம தத்வத்தை ஸாக்ஷாத் காரம் செய்யும் வரை அக்கருணை கூடவேயிருந்து உதவ வேண்டுமென்று கருத்து.

**अनाद्युपाधौ**

**அநாத்³யுபாதௌ⁴**

அநாதியான உபாதியாகிய அவித்யை ஞான மேற்பட்டவுடனேயே நிவர்த்தி யாகிவிடும். ஆனுலும் பிராரப்த கர்ம சேஷம் இருக்கும் வரை அதிளுல் ஏற்பட்ட சரீரம் இருந்தே வருமாதலால், அவ்வபாதி பூராவும் பாக்கியன்னியில் நிவிருத்தி யாவது சரீரம் விலகும்போது என்ற அபிப்பிராயம்.

**नष्टसन्देहवृत्तिः**

**நஷ்டஸந்தே³ஹவ்ருத்திः**

ஸந்தேஹ விருத்தி விலகினவனுய் என்பது சரீரம் போவதற்கு முன்ஞல் இருந்த ஜீவன் முக்தஊயேதான் குறிக்கிறது. விதேஹ முக்தியில் தான் அவ்விதம் ஏற்படுகிற தென்ற தாத்பர்யம் கிடையாது. ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட உடனேயே ஸர்வ ஸம்சயங்களும் நிவர்த்தியாகிவிடுகின்றன. இது முண்டகோப நிஷத்தில்

**भिद्यते हृदयग्रन्थिः छिद्यन्ते सर्वसंशयाः ।**
**क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥** II 2 (9)

**பி⁴த்³யதே ஹ்ருத³யக்³ரந்தி²ः சி²த்³யந்தே ஸர்வஸம்ஶயாः ।**
**க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்³ருஷ்டே பராவரே ॥**

என்று வியக்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது. பின்னால் 99 - வது சுலோகத்தை பார்க்கவும்.

**(92)**

ஜீவன் முக்தி தசையை அடைந்த ஞானியினுடைய மனே நிஃல எப்படி யிருக்கும் என்பதை விஸ்தாரமாக பத்து சுலோகங்களில் வர்ணிக்கிருர். அந்த நிஃலயடைய வேண்டுமென்று பிரவிருத்தி செய்யும் ஸாதகன் அந்த சுலோகங்களில் கண்டபடி அனுஸந்தானம் செய்து அப்யாஸம் செய்து செய்து அந்நிஃல அவனுடைய ஸ்வரூபத்துடன் சேர்ந்துவிட வேண்டுமென்று தாத்பர்யம் -

**नो देहो नेन्द्रियाणि क्षरमतिचपलं नो मनो नैव बुद्धिः**
**प्राणो नैवाहमस्मीत्यखिलजडमिदं वस्तुजातं कथं स्याम् ।**
**नाहङ्कारो न दारा गृहसुतसुजनक्षेत्रवित्तादि दूरं**
**साक्षी चित्प्रत्यगात्मा निखिलजगदधिष्ठानभूतः शिवोऽहम् ॥ ९२ ॥**

**நோ தே³ஹோ நேந்த்³ரியாணி க்ஷரமதிசபலம் நோ மனே நைவ பு³த்³தி⁴ः**
**ப்ராணோ நைவாஹமஸ்மீத்யகி²லஜட³மித³ம் வஸ்துஜாதம் கத²ம் ஸ்யாம் ।**
**நாஹங்காரோ ந தா³ரா க்³ருஹஸுதஸுஜனக்ஷேத்ரவித்தாதி³ தூ³ரம்**
**ஸாக்ஷீ சித்ப்ரத்யகா³த்மா நிகி²லஜக³த³தி⁴ஷ்டா²னபூ⁴தः ஶிவோ(அ)ஹம் ॥ 92 ॥**

